# கசடதபற

ஒரு வல்லின மாத ஏடு

1

அக்டோபர் 1970
விலை 30 காசு

ஆசிரியர் :
நா. கிருஷ்ணமூர்த்தி



இலக்கியப் படைப்புகளின் மூலமாக இந்தஏடு என்னென்ன சாதிக்கப்போகிறது என்று பட்டியல் ஏதும் தருகிற உத்தேசம் இல்லை. இன்றைய படைப்புகளிலும், அவற்றைத் தாங்கி வருகிற பத்திரிகைகளிலும் தீவிர அதிருப்தியும் அதனால் கோபமும் உடைய பல இளம் எழுத்தாளர்கள், கவிஞர்கள், ஓவியர்கள், திறனாய்வாளர்களின் பொது மேடைதான் கசடதபற. ஊதிப் போன சுய கௌரவங்களாலும், பிதுங்கிய பார்வைகளாலும்இவர்கள் பாதிக்கப் படாதவர்கள். அரசியல், சமயம், மரபு இவை சம்பந்தப்பட்ட ஒழுக்கங்களுக்கு வாரம் தவறாமல் தோப்புக்கரணம் போடுபவர்கள் யாரும் இவர்களில் இல்லை. இலக்கியத்தை அதுவாகவே பார்க்கத் தனித் தனியே தங்களுக்குப் பயிற்சி நிரம்பப் பெற்று பிறகு சேர்ந்து கொண்டவர்கள் இவர்கள். உலகின் இதர பகுதியின் இலக்கியத்தில் நிகழ்வனவற்றைக் கூர்ந்து கவனிபபதிலும், தமிழ்ச சிந்தனையில் புதிய கிளர்ச்சிகளை இனம்கண்டு கொள்வதிலும் இவர்கள் தேர்ந்தவர்கள். பலகாலமாகவும், பலராலும் சொல்லப் படுகிறது எனறு ஒன்றை ஏற்க மறுப்பதோடு எதையும் விமரிசன ரீதியாகப் பார்க்க வேண்டும் என்று வற்புறுத்துபவர்கள்இவர்கள். எழுத்துக் கலை போலவே, சக கலைகளான ஓவியம் நாடகம் இவற்றிலும் நிகரான ஈடுபாடு உள்ளவர்கள் இவர்கள். இப்படிப்பட்டவர்கள் சேர்ந்து கசடதபறவை உருவாக்கி இருக்கிறார்கள்.

சொந்த அல்லது வேற்றரசாங்கத்தின் பணம் ஏதும் கொல்லைப்புறமாக இவர்களுக்கு வந்திருக்கவில்லை. அல்லது பை கொழுத்துப்போன ஒருவருடைய இறுதிக் காலத்தியதே போன்ற ஆவலை நிறைவேற்றவோ, கேவலம் சுய விளம்பர நமைச்சலைத் தீர்த்துக் கொள்வதற்காகவோ கசடதபற வந்திருக்கவில்லை. மாறாக, சிந்திக்கிறவனுக்கு இன்றைய உலகம் விடும் அறை கூவல்களை ஏற்றுக்கொள்ள வந்திருக்கிறது. சமூகத்தின் கூட்டுப் பொறுப்பான கலாச்சாரத்தின் ஆழ அகலங்களை, ரகசிய—அம்பலங்களை இலக்கியத்தில் காட்டக் கசடதபற வந்திருக்கிறது.

புதிய எழுத்தாளர்கள், கவிஞர்கள், கட்டுரையாளர்களை வரவேற்கக் கசடதபற பெரிதும் விரும்பும். எதையும் செய்யுங்கள் ஆனால் இலக்கியமாகச் செய்யுங்கள் என்றுமட்டுமே கசடதபற சொல்லும்.

இலக்கியத்தை வைத்துப் பிழைப்பு நடத்துபவர்களைப் பற்றிக் கவலை இல்லை. இலக்கிய ரொட்டியின் எந்தப் பகுதியில் வெண்ணெய் தடவப்பட்டிருக்கிறது எனறு ஆராய்பவர்களைப் பற்றிக் கவலை இல்லை. இலக்கியத்தைவாழ்க்கையின் அனுபவப் பகிர்தலாக, முன்னோட்டமாகக் கருதுபவர்கள் எல்லோரையும் அழைக்கிறது கசடதபற.

# தமிழை எங்கே நிறுத்தலாம்

வாசன் மகனுக்கென்றால் மட்டும்
அச்சுப் பொறிகள் அடிக்குமோ?
முத்துச்சாமி போன்றவர் சொன்னால்
மாட்டேனென்று மறுக்குமோ?

காசுகள் ரெண்டு கையிலிருந்தால்
எதையும் எங்கும் நிறுத்தலாம்
காசு படைத்தவன் தமிழைக் கொண்டுபோய்
எங்கெல்லாமோ நிறுத்தினான்.

புலவர் பலரும் தமிழை இறுக்கிக்
குகைக்குள் கொண்டு தள்ளினர்.
குறளால் சிலம்பால் புறத்தால் அகத்தால்
கண்ணைக் கண்ணைக் கட்டினர்.

குகையிலிருந்த தமிழைக் கண்டு
குமுதம் கட்டிக் கொண்டதும்
சுப்ரதீபக் கவிஞர்களெல்லாம்
வஜனம் எழுதிக் களிக்கிறார்.

தொழில்மய மாகத் திருமணமாகாக்
காளைகள் சுற்றும் நாட்டிலே
அவர்களுக் கென்றே ஏடு நடத்துவோர்
மூட்டை அவிழ்த்துத் தருகிறார்.

வேற்று நாட்டுச் சரக்குகளோடு
உள்ளூர்ச் சரக்கை ஒப்பிட்டால்
தலையில் தலையில் அடித்துக் கொண்டால்
தேவலாம் போல இருக்குது.

மோச மின்னும் போவதற்குள்ளே
வித்தைக்காரர் வரவேண்டும்
வித்தை தெரிந்த எழுத்துக் கலைஞர்
விலகி நிற்கக் கூடாது.

வித்தை தெரிந்தவர்க் கெல்லாமின்று
வேலை இருக்குது பலவாக.
நம்
கையிலும் ரெண்டு காசுகளுண்டு
இனி
தமிழை எங்கே நிறுத்தலாம்.

ஞானக்கூத்தன்

# இப்படியே விடக்கூடாது

ந. ஜெயராமன்

சுந்தரம் வீட்டில் எல்லோரிடமும் சிடுசிடுவென்று நடந்து கொள்கிறான். இப்பொழுதெல்லாம் அவன் வீட்டிற்குள் நுழைந்தாலே ரகளை ஆரம்பமாகிவிடுகிறதென்று எல்லோருக்கும் அபிப்ராயம். அதுவும அவன் தன் அக்காள் ரேவதியைக் கரித்துக் கொட்டுவது சொல்லி மாளாது.

"அம்மா, உன் அருமைப் பிள்ளையாண்டான் வந்துட்டான். எல்லாத்தையும் ரெடியா வச்சுடு."—ஜன்னலைப் பார்த்தவாறு உட்கார்ந்து கதைப் புத்தகம் படித்துக் கொண்டிருந்த ரேவதி அம்மாவிற்குக் குரல் கொடுத்தாள்.

''அவன் வர்றபோதே துருவாசர் மாதிரி வருவான். அவன் வம்புக்குப் போகாதே. உன் வாயைப் பொத்திண்டிரு.''

''இந்த வீட்டிலே ஏன்தான் எல்லாரும் அவனுக்கு இப்படிப் பயப்படறாளோ தெரியலை'' ரேவதி அலுத்துக் கொண்டாள்.

வேர்வை கசகசப்பில் முகம் கறுத்துப் போய், தெருப் புழுதி அத்திக் காயில் சாம்பற்பூத்த மாதிரி காலில் மண்டிக் கிடக்க சுந்தரம் உள்ளே நுழைந்தான்.

"இந்தாடீ, பையை எடுத்து வை."

''பெரியவா வந்துட்டா. இனிமே அதிகாரம் தூள் பறக்கும்.''

"ஆச்சு. சண்டை ஆரம்பமாயிடுத்து. இனிமே பாயிலே உடம்பு சாயறவரைக்கும் இதே பாடுதான். நீங்க இரண்டு பேரும் பூர்வ ஜன்மத்திலே விரோதிகளாக இருந்திருக்கனும்.''

பாத் ரூமிற்குள் போனவன் வாளி ஜலத்தையும் அப்படியே சாய்த்துக் கொண்டான்.

''தண்ணியைப் பார்த்துக் கொட்டுடா. சொம்பாலே எடுத்து அலம்பிண்டா என்ன? என்ன அவசரம் இப்போ? எங்கே என்ன கொள்ளை போயிடறது?''

டிபன் தட்டைக் கையில் வாங்கிக்கொண்டு அறைக்குள் நுழைந்தான்.

''என்னடீ என்ன?''

"என்ன அதட்டல் பலமாயிருக்கு?''

"என்ன பெரிசா ஸ்டைல் பண்ணிக்கறே? நீ இனிமே இரட்டைப் பின்னல் போட்டுக்கக் கூடாது. அசிங்கமாயிருக்கு.''

"நீ யாருடா என்னை அதிகாரம் பண்ண? நான் என் இஷ்டப்படிதான் இருப்பேன். பெரிய வாள்ளாம் சும்மா இருக்கறப்போ உனக்கு என்ன வந்தது?''

''சரி, சரி. தண்ணி கொண்டா.'' ரேவதி எழுந்து போனாள்.

''தாவணியைச் சரியாப் போட்டுண்டு போயேன். இந்த ஸ்டைல் எங்கேந்து கத்துண்டே? ஐய்ய நடையைப் பாரு!''

"உனக்கு இனிமே நான் ஒண்ணும் பண்ணமாட்டேன். என் வழிக்கு நீ வராதே.'' பாதிதூரம் போனவள் திரும்பிவந்து உட்கார்ந்தாள்.

''தண்ணி தராட்டா புத்தகம் கிடைக்காது.'' ரேவதி பாதி படித்துவிட்டுக் கவிழ்த்து வைத்திருந்த புத்தகத்தை எடுத்து வைத்துக் கொண்டாள்.

''வரவர மாதுகூட உன்னை ஒண்ணும் சொல்ல மாட்டேங்கிறான். அதான் உனக்குத் திமிர் ஏறி யிருக்கு. நீ கதை படிக்கக்கூடாதுன்னு மாது சொல் லிட்டுப் போயிருக்கான். நீ.படிச்சே அவன் வந்ததும் சொல்லிடுவேன். அப்பாவும் உதைப்பா. சொல்லிட் டேன்.''

உள்ளே நுழைந்த அம்மா சொன்னாள் :

''இதோ பாரு சுந்தரம், நான் சொல்றேன்னு எங்கிட்டே நாய்மாதிரி விழாதே. பரீட்ஷை முடியற வரைக்கும் கதைப் புஸ்தகம் வழிப் போகாதே, சொல் லிட்டேன். அப்புறம் ஒங்கப்பா பாடு. உன் பாடு. ஒங்க அண்ணன் பாடு.''

''நீ ஏம்மா பயப்படறே? அந்தக் கழுதைகிட்டே என்ன பயம்? இப்படி நீங்க பயந்து பயந்து பேசறது னாலேதான் அவன் தலைமேலே ஏறி உட்கார்றான்.''

''எனக்குத் தெரியும் எப்ப என்ன பண்ணனும்னு. நீங்க ஒண்ணும் சொல்ல வேண்டாம்.''

''இந்த மாதிரி அகாதி பிடிச்சு அலைஞ்சேன்னா நீ உருப்பட மாட்டே சொல்லிட்டேன்''

அம்மா கசந்து கொண்டாள்.

''ஏய் ரேவதி, நாற்காலியை விடு. நான் உட் கார்ந்துக்கனும்.''

அவள் எழுந்ததும் ஒரு கிழிசல் துண்டை எடுத்து நாற்காலியைத் தட்டினான். அவன் துண்டை விசிறி உதறியபோது அம்மாவின் கண்ணில் கொடுக்கு பட்டது.

''பார்த்துடா. இது என்ன நாசூக்கு?''

''போம்மா. ஒரே தூசி.''

''ஆமாண்டா. இப்ப அவள் உட்கார்ந்த இடத் திலே உனக்குத் தூசி எங்கேந்து வந்தது?''

''எனக்கு அருவருப்பா இருக்கு. நான் தட்ட றேன். இதுக்கெல்லாம் நீ ஏன் ஏதாவது சொல்றே?''

''என்ன சுந்தர், ரெண்டு குரல்லே பேசறே. நீ இந்த மாதிரி பண்றதெல்லாம் ஸ்டைல் இல்லையோ?''

''அது தானா வர்றது. உன்னை மாதிரி வேணும்னு நான் ஒண்ணும் பண்ணமாட்டேன்.''

''ஏய் ரேவதி, உன் புஸ்தகத்தை எடுத்துண்டு நீ அந்தண்டை போ. அவனோடே சண்டைக்குப் போகாதே. உங்களோட மல்லுக்கு நிக்க என்னாலே முடியாது.''

''புஸ்தகத்தை இப்ப தர மாட்டேன். நான் கொஞ்ச நேரம் படிக்கப் போறேன்.''

''எக்கேடு கெட்டுப் போங்கோ.'' அம்மா கீழே காலை நீட்டிக் கொண்டு உட்கார்ந்து தனக்குத்தானே சொல்வது மாதிரி பேசினாள் :

''இப்ப எல்லா நல்ல வழக்கமும் போயாச்சு. துர் குணம்தான் ஜாஸ்தியாப் போச்சு. சாமி படத்தைத் துடைச்சு பூ போடறது, விளக்கு ஏத்தினதும் ஸ்தோத் ரம் சொல்றது எல்லாம் போன இடம் தெரியலை. இப் டியே இருந்தா உருப்படற வழி எங்கே?''

சுந்தரம் சூள் கொட்டிவிட்டுப் புஸ்தகத்தைப் பார்ப்பதில் கவனத்தைச் செலுத்தினான். ரேவதி விளக்கேற்றிவிட்டு அம்மாவிற்குக் குங்குமம் கொடுத் தாள்.

''கதை படிச்சது போறும். படிப்பைக் கவனி.''

''சே! ஏன் இப்பிடி பிடுங்கித் திங்கறேள்?''

சுந்தரம் புஸ்தகத்தைத் தரையில் வீசியெறிந்து விட்டு எழுந்தான். சோம்பல் முறித்தான்.

''இனிமே நான் தினமும் எக்ஸர்சைஸ் பண்ணப் போறேன். அப்பதான் கைகால் எல்லாம் திண்டுன்னு ஆகும். எல்லாரும் தள்ளிப் போங்க'' கையை நீட்டி உடம்பை வளைத்து அவனுக்குத் தெரிந்த தேகப் பயிற்சி செய்தான்.

''இது ஒண்ணும் எக்ஸர்சைஸ் இல்லை.''

''சும்மா இருடீ. வெறுமனே தோப்புக் கரணம் போடறதுகூட உடம்புக்கு நல்லதுதான்.''

நடையில் காலடியோசை கேட்டது. ரேவதி திரும்பிப்பார்த்துவிட்டு, ''அப்பா வந்தாச்சு'' என்றாள். அம்மா எழுந்து கொண்டு சமையலறைக்குப் போகக் கிளம்பினாள்.

''அவனுக்கும் சேர்த்துக் காப்பி கலந்துடு. அவ னும் வந்திண்டிருக்கான். மளிகைக் கடைக்காரன் கிட்டே ஆர்லிக்ஸ் இருக்கான்னு விஜாரிச்சுண்டு வரப் போனான்.''

அப்பா சட்டையைக் கழற்றிவிட்டு கை, கால் கழுவப் பாத்ரூமிற்குள் போனார்.

தலையை ஒதுக்கி விட்டுக் கொண்டு, நெற்றியில் விபூதி இட்டுக் கொண்டு பள்ளிக்கூடப் புத்தகங்களை யெடுக்க மேஜையடிக்கு வந்த சுந்தரம் பக்கத்தில் நின்று கொண்டிருந்த ரேவதியின் முதுகில் பலமாக ஒரு தட்டுத் தட்டினான்.

முகத்தைத் துண்டால் துடைத்துக்கொண்டுவந்த அப்பா இதைக் கவனித்துவிட்டு,

''அவன் கிட்டே என்ன சேஷ்டை? படிக்கிற வழியைப் பார்,'' என்று அதட்டல் போட்டார்.

''ஒருத்தர் மாத்தி ஒருத்தர் என்கிட்டே குத்தம் கண்டு பிடிச்சுண்டே இருங்கோ.''

அப்பா சிரித்துக் கொண்டார். கையில் காப்பி யோடு வந்த அம்மா சொன்னாள் :

''பின்னே ஒன்னை மெச்சுவாளோ? பெரியவா, சின்னவாங்கிறது இல்லாமஎன்னபேச்சுப்பேசறேநீ?''

''அம்மா, மாதுவும் வந்துட்டான்.'' ரேவதி சொன்னாள்.

மாது கூடத்துப் பெஞ்சியில் உட்கார்ந்து பூட்ஸைக் கழற்றிக் கொண்டிருந்தான். அவன் கொண்டுவந் திருந்த சாமான்கள் பெஞ்சியில் இருந்தன.

''என்ன அண்ணா, காலண்டரா?''

''ஆமாம். மளிகைக் கடைக்காரன் கொடுத்தான்.'' சுந்தரம் அதைப் பிரித்தான்.

''இதை இங்கே மாட்ட வேண்டாம் அண்ணா. யாருக்காவது கொடுத்துடலாம்.''

''ஏன்?'' என்று கேட்டுக் கொண்டே எழுந்து மாதுவும் படத்தைப் பார்த்தான். மார்பகமும், புஜங்க ளும் லேசாகத் தெரிய ஒரு பெண் சிரித்துக் கொண்டி ருந்தாள்.

''இளிப்பைப்பாரு. கர்மம்.'' சுந்தரம் சத்தமாகச் சொன்னான்.

''அவன் கிடக்கரான். இதை நாம்பளே வச்சுக்க லாம்.'' ரேவதி காலண்டரை எட்டிப் பார்த்துவிட்டுச் சொன்னாள்.

"அதுபாட்டுக்கு எங்கேயாவது மூலையில் இருந்துட்டுப் போகட்டும். உன்னை என்னப் பண்ணப் போறது அது?"

அம்மா இப்படிச் சொன்னதும் ரேவதி சுவரில் ஒதுப்புறமாக இருந்த ஆணியில் அதை மாட்டினாள்.

சுந்தரம், 'எனக்கென்ன?' என்று சொல்லிவிட்டு உள்ளே போனான்.

"இதோ நான் அரை மணியிலே வந்துடறேன்." அப்பா சொல்லிவிட்டு வெளியே கிளம்பினார். வேஷ்டியைச் சுற்றிக் கொண்டு மாது பாத்ருமிற்குள் போனான். அம்மா அவனைத் தொடர்ந்து சமையலறைப் பக்கம் சென்றாள்.

'இங்கே வாயேன் மாது. இவன் காலண்டரில் கிறுக்கறான்."

"சுந்தரம், சும்மா இரு." மாட்டியிருந்த காலண்டரைக் கழற்றி ரேவதி அவனிடம் கொண்டு போய்க் காண்பித்தாள்.

"என்னடா இது?"

"ஒண்ணும் இல்லே. வெறுமனே அவள் ஜாக்கட்டுக்கு டிசைன் போட்டேன்.

படத்திலிருந்த பெண்ணின் ஜாக்கட் தோளிலிருந்து வெகுவாகச் சரிந்திருந்தது. அந்த இடத்தில் தெரிந்த வெற்றுடல், கழுத்து வளைவு ஆகிய இடங்களில் சுந்தரம் பேனாவால்கோடுகள் போட்டிருந்தான்.

மாது சிரித்துக் கொண்டான்.

"நீ அவனைக் கண்டிக்கமாட்டேங்கறே. அதான் அவன் இப்படி இருக்கான்." ரேவதி புகார் பண்ணினாள்.

மாதுவிற்குக் காப்பி கொடுத்த அம்மா கேட்டாள்: "ஏண்டா இன்னிக்கும் உனக்குத் துணி வாங்காம வந்திருக்கே?"

"வாங்கினுப் போச்சு. ஒரே டயர்டா இருந்தது. பஸ்ஸும் சட்னுகிடைச்சுது. ஏறி வந்துட்டேன்."

"நாளைக்காவது வாங்கிடு. அப்புறம் பணம் செலவாயிடும்."

## விளம்பரம்

மல்லிகையிரவில்
விளக்குத்தூணிருட்டில்
விருந்துக்கழைத்தன,
வளையொலிகள்.
காலணா நாணயமாய்
கண்ட குங்குமம்
மனைவித் தன்மை
மிகுந்ததாலா?

புதுமைக்கூத்தன்

## பயம்

கூரையில் தொங்கும் விளக்கு
கூட்டும் நிழல் பெரிதென்று

படுக்கை விளக்கைப்போட்டுப்
படிக்கப் புத்தகம் எடுக்க,
விளக்குக் கூண்டின் நிழல்
விரிந்து சுவரை மறைத்தது.

தீபப்ரகாசன்

"அண்ணா, அடுத்தமாசம் எனக்கு ரெண்டு நாலு முழ வேஷ்டி வாங்கித்தாயேன். நான் வேஷ்டிகட்டிப் பழகிக்கப்போறேன்."

"நீ சுண்டைக்காயாட்டம் இருக்கே. அதுக்குள்ளேயும் உனக்கு என்ன வேஷ்டி வேண்டியிருக்கு?"

"ஏய் ரேவதி, ஏதாவது பேசினால் உதைப்பேன்."

"ஆகட்டும் பார்க்கலாம். இப்ப நீ படி."

"இன்னிக்கு நான் படிக்கலே. போர் அடிக்கிறது. படிக்க ஓடலே."

"பேஷா இருக்குடா. படிக்கிறதுக்குப் போர் அடிச்சுதுன்னு போக வேண்டியதுதான்." அம்மா சொன்னாள்.

மாது பேப்பரை எடுத்துக் கொண்டு நாற்காலியில் உட்கார்ந்தான். சுந்தரம் ஏதோ பாடப் புத்தகத்தை எடுத்துப் பிரித்துக் கொண்டு கீழே உட்கார்ந்தான்.

"ஏண்டா சாப்பிட வரலையா?"

"அப்பாவும் வந்துடட்டும்."

பிரித்தபுத்தகத்தின் முன்னால் சுந்தரம் உட்கார்ந்திருந்தான். அவன் எங்கோ கவனமாக இருந்தான். பக்கத்தில் எங்கிருந்தோ சினிமா பாட்டு கேட்டது. ஆண்குரலும், பெண்குரலும் மாறி மாறிக் கேள்வி, பதில் ரூபத்தில் வந்து கொண்டிருந்தது.

"இப்ப படிக்கிற மாதிரி பேர் பண்ண வேண்டாம். சாப்பிட்டுட்டு ஒழுங்கா ஒரு மணி தேசாலம் படி" சுந்தரத்தைக் கவனித்த அம்மா சொன்னாள்.

"தட்டை வையுங்கோ." உள்ளே நுழைந்து கொண்டே அப்பா சொன்னார்.

சாப்பிடுகையில் அப்பா மாதுவிடம் சொன்னார்.

"சாம்பசிவத்தோட பிள்ளைக்கு ஏதோ புஸ்தகம் வேணுமாம். நம்மாத்துலே இருந்தா கொடேன்."

"பார்க்கிறேன்."

சுந்தரம் லேசாக முணுமுணுத்தான்.

"சின்னதுரை என்ன சொல்றான்?"

"அவனுக்கு அந்த பிள்ளையைக் கண்டா இப்ப ஆகிறது இல்லே. ஏன்னு தெரியலே." அம்மா சொன்னாள்.

"ரொம்ப தயாள குணம்." சுந்தரம் சொன்னது அப்பாவின் காதில் விழுந்தது. அவருக்குக் கோபம் வந்து விட்டது.

"அசிகை பிடிச்ச ராஸ்கல். உனக்குப் புஸ்தகம் இருக்காதோன்னு நீஒண்ணும்கவலைப்படவேண்டாம். எங்களுக்குத் தெரியும் உன்னைப் பார்த்துக்கறதுக்கு."

"போறும். பேசாம இருங்கோ. அவனுக்குச் சரியா நீங்க சத்தம் போடவேண்டாம்." சுந்தரம் அவசர அவசரமாகச் சாப்பாட்டை முடித்துக் கொண்டு எழுந்து போனான்.

"இந்தப் பயலை இப்படியே விடக்கூடாது. கொட்டத்தை அடக்கனும்."

"தானே சரியாப் போயிடும் அப்பா."

"இருந்தாலும் மாது, உன்னை மாதிரி அவன் இல்லை." அம்மா சொன்னாள்.

"நானும் அப்படித்தான் இருந்திருப்பேன். அவன் வயசிலே நான் சித்தாப்பா வீட்டிலே இருந்தேன், உங்களுக்குத் தெரியலே." மாது சிரித்துக் கொண்டே சொன்னான்.

"எல்லாம் புதுசா இருக்கு" என்று அம்மா இழுத்தாள்.

# தக்கையின் மேல் நான்கு கண்கள்

சா. கந்தசாமி

மாணிக்கம் பெரிய விசிறி வலையைப் பரக்க விரித்துப் போட்டபடியே ராமுவைக் கூப்பிட்டார். ஒரு முறைக்கு மற்றொரு முறை அவர் குரல் உயர்ந்து கொண்டே வந்தது.

நான்காவது தடவையாக, ''எலே ராமு'' என்றவரின் குரல் பலமாகக் கேட்டபோது, ''இப்பத்தான் வெளியே போனான்'' என்று அவர் மனைவி உள்ளேயிருந்து பதிலளித்தாள்.

ராமு வெற்றிலை இடித்துத் தரும் நேரம் அது. இரண்டு மூன்று வருடமாக அவன்தான் வெற்றிலை இடித்துத் தருகிறான். அநேகமாக அதில் மாறுதல் ஏற்பட்டதில்லை.

ஒருநாள் தூண்டில் முள் உள்ளங்கையைக் கிழித்துக் காயப்படுத்தியதும் மாணிக்கம் ராமுவின் சின்னஞ் சிறிய கையைப் பிடித்து வெற்றிலை இடிக்கக் கற்றுக் கொடுத்தார். அவனோ அவர் சொன்னதையெல்லாம் காதில் போட்டுக் கொள்ளாமல் கையை அழுத்திப் பிடித்து வேகமாக வெற்றிலை இடித்தான். அப்படி இடிப்பதில் அவனுக்கு உற்சாகமாகவும், மகிழ்ச்சியாகவும் இருந்தது. மூன்றாம் நாள் உலக்கையைக் கையில் பிடிக்க முடியவில்லை. பெரிதாக இரண்டு கொப்புளங்கள் கிளம்பி விட்டன.

அவனிடம் தன் பெரிய கையை அகல விரித்துக் காட்டி மாணிக்கம் கெக்கெக்கவென்று சிரித்தார்.

''தெரியுமா, நாப்பத்திரெண்டாம் வயசிலேயிருந்து வெத்தலெ இடிக்கிறேன். இன்னும் ஒருகொப்பளம் வர்லே. ஆனா உனக்கு ரெண்டு நாளிலே நாலு கொப்பளம். இதுக்குத்தான் சொல்றதைத் கேக்கனும் என்கறது...'' என்றபடி வெற்றிலை இடிப்பதில் உள்ள சூட்சமங்களை, தாழ்ந்த தொனியில் விவரித்தார். அவன் கவனமாக ஒவ்வொரு வார்த்தையையும் காதில் வாங்கிக் கொண்டான். ஆனால் ஒரு முறையும் அவர் சொன்னதை அவன் பின்பற்றுவதில்லை. அவனுக்கொரு தனிக்குணம்; முறித்துக் கொண்டுபோவது.

பத்து வயதில் அவன் தனியாகச் செல்ல ஆரம்பித்தான். மாணிக்கம் தெற்குத் துறையில் தூண்டில் போட்டால் அவனோ கிழக்குத் துறைக்குத் தூண்டிலை எடுத்துக் கொண்டு செல்வான். அது அவன் இடம். ராசியான இடம். தாத்தாவிடமிருந்து பிரிந்து வந்த அன்றே அந்த இடத்தைக் கண்டு பிடித்தான்.

ஒரு பகல் பொழுது முழுவதும் சின்னத் தூண்டிலைத் தாத்தா கூடவே போட்டு, ஒரு மீனும் கிடைக்காமற்போகவே அவனுக்கு ஏமாற்றமாகவே இருந்தது. தாத்தா பக்கம் திரும்பினான். அவர் பார்வை தக்கையை நோக்கியபடியே இருந்தது.

''அந்தப் பக்கமா போறேன் தாத்தா'' என்று தன் அதிர்ஷ்டத்தைத் தேடிச் சென்றான். ஒற்றையடிப் பாதையிலேயே நடந்து, ஆனேச்சரிவில் இறங்கி, புன்னை மரத்தடியில் நின்று தூண்டிலை வீசினான். சற்று நேரம் தக்கை அசையவில்லை. போட்டது மாதிரி கிடந்தது. அப்புறம் மினுக்மினுக்கென்று ஓர் அசைவு; சின்னஞ்சிறிய மீன்குஞ்சுகள் இரையை அரிக்கின்றன. தக்கை முன்னும் பின்னுமாக அசைகின்றது.

அவன் தக்கையை ஆழ்ந்து நோக்கினான். திடீரென்று நீரில் ஓர் அசைவு; அலையலையாக நீர்வட்டமிட்டது. ஆனால் தக்கையோ அசைவற்றுக் கிடந்தது. அவன் தூண்டிலை மேலே இழுத்துப் பார்த்தான். வெறும் முள் மட்டும் வந்தது. இரையைச் சின்னஞ் சிறிய மீன்கள் நுனிவாயால் அரித்துத்தின்றுவிட்டன.

தூண்டிலை எடுத்துக் கொண்டு கரைக்குச் சென்றான். பெரிய கொட்டாங்குச்சியிலிருந்து மண்ணைத் தள்ளி ஒரு மண்புழுவை எடுத்துக் கோர்த்து, தூண்டிலை அல்லிக் கொடியோரமாக வீசினான்.

இப்படி இடம் மாறும் பழக்கமெல்லாம் தாத்தாவிடம் கிடையாது. ஓரிடத்தில்தான் தூண்டில் போடுவார். மீன் கிடைத்தாலுஞ்சரி, கிடைக்காவிட்டாலுஞ் சரி அவர் இடம்மாறாது. ஆனால் கையை நீட்டித் தூண்டிலைச் சற்றுத் தள்ளிப் போடுவார். தக்கை மேலும் கீழுமாகத்தள்ளி நூலைக் கூட்டிக் குறைப்பார்; ஆனால் வாயிலிருந்து ஒரு வார்த்தையும் வராது. குளத்தங் கரைக்கு வந்தவுடனே பேச்சு நின்று விடும். அமைதியாகவும், கம்பீரமாகவும் நின்றுகொண்டு தூண்டிலை வீசுவார்.

தாத்தாவைப் போலவே தலையைச் சாய்த்துக் கொண்டு தூண்டிலை முன்னே வீசினான் ராமு. ஒரு மீனும் கிடைக்காமல் போக மாட்டேன் என்று உறுதியை மீண்டும் கொண்டு தக்கையைப் பார்த்தான். தக்கை குதித்துத் திடீரென்று மேலே எழும்பியது. அவன் முழு கவனமும் தூண்டிலில் விழுந்தது. கையைத் தளர்த்தி நூலைத் தாராளமாக விட்டான். சரசரவென்று தக்கை நீரில் அழுந்தியது; மேலும் மேலும் கண்ணுக்குத் தெரியாமல் தண்ணீரில் இறங்கியது. மீன் வேகமாக இரையை விழுங்குகிறது என்பதை உணர்ந்து கொண்டான். இம் மாதிரி சந்தர்ப்பங்களில் தாத்தா எப்படி நடந்து கொள்வார் என்பது அவன் நினைவிற்கு வந்தது.

மீசையை ஒரு பக்கமாகத் தள்ளிவிட்டுக் கொள்வார். முகம் மலரும்; நரையோடிய மீசை ஒரு பக்கமாக ஒதுங்க சிறு புன்சிரிப்பு ஒன்று வெளிப்படும். பதட்டமில்லாமலும ஆர்பாட்டமின்றியும் நேராகத் தூண்டிலை இழுப்பார். மீன் துடிதுடித்துக்கொணடு மேலே வரும். அநேக சந்தர்ப்பங்களில் தலைக்குமேலே வந்த மீன் ஆட்டத்தாலும் உலுப்பலாலும் தப்பித்துக் கொண்டு போவதுண்டு.

ஒரு முறை தாத்தா தூண்டிலைத் தலைக்கு நேராக இழுக்கும்போது, ''கொஞ்சம் வெட்டி சொடுக்கி இழுங்க தாத்தா'' என்று கத்தினான். அவர் மெல்லத் திரும்பிப் பார்த்தார். உதட்டில் சிரிப்பு தெரிந்தது. அவன் பின்னுக்கு நகர்ந்து மறைந்தனா. அப்புறம் மாணிக்கம் தூண்டிலைத் தன் விருப்பப்படியே இழுத்தார். மேலே வந்த கெண்டை ஓர் உலுப்பு உலுப்பி துள்ளித் தண்ணீரில் போய் விழுந்தது.

அவன் தூண்டிலில் சிக்கிய மீன் தப்பித்துக் கொண்டோட முடியாது; சாதுரியமாகவும் கவனமாகவும் இழுத்துக் கரைக்குக் கொண்டு வந்து விடுவான். தன் தீர்மானப் படியும், விருப்பப்படியும் தூண்டிலை

இழுக்கலாம். கட்டுப்படுத்த யாருமில்லை. தண்ணீருக்குள்ளேயே தூண்டிலைச் சொடுக்கி, வலது பக்கமாக இழுத்தான். ஒரு பெரிய மயிலை துடிதுடிக்கக் கரைக்கு வந்தது.

தூண்டிலைக் கீழே போட்டுவிட்டு, காய்ந்த சருகுகளின்மேல் விழுந்து குதிக்கும் மயிலையைப் பார்த்தான் ராமு. மனத்திற்குள்ளே சந்தோஷம்!

தன்னந்தனியாக ஒரு மயிலையைப் பிடித்து விட்டான். தாத்தா தூண்டிலில் கூட எப்பொழுதாவது — ரொம்ப அபூர்வமாகத்தான் மயிலை அகப்படும். நெளிந்தோடும் மயிலையின் பின்னே போய்க்கழுத்தைப்பிடித்து மேலே தூக்கினான். அதைப்பற்றி தாத்தா நிறைய சொல்லியிருக்கிறார். மீனிலே அது ஒரு தினுசு. வீச்சுவீச்சாக முள்ளும் மீசையும் உண்டு. முள் குத்தினால் கடுக்கும்; இரண்டு மூன்று நாட்களுக்குக் கூட சேர்ந்தாற் போலக் கடுக்கும். கோடையில் குளத்தில் இறங்கி மீன் பிடிக்கும் போது முதன் முறையாக மயிலை அவனைக் கொட்டியது வலி தாளாமல் துடிதுடித்துப் போனான். அதிலிருந்து மயிலைமீது அவனுக்குத் தனியான கவனம். அதே கவனத்தோடு மயிலையைப் பிடித்து தூண்டில் முள்ளைப்பிடுங்கினான்.

“நீதான் பிடிச்சியா?” என்று கேட்டுக் கொண்டு தாத்தா அங்கே வந்தார். தாத்தாவின் கேள்விக்குப் பதில் எதுவும் அளிக்கவில்லை. குனிந்தபடியே தன் வேலையைச் செய்து கொண்டிருந்தான் “பெரிய தூண்டிக்காரனாயிட்டே நீ” மாணிக்கம் அவன் மீது கை போட்டார்.

ராமு சற்றே பின்னுக்கு நகர்ந்தான். தாத்தா மீது திடீரென்று அவனுக்குக் கோபம்வந்தது. தன்னை அழிக்கப் பார்க்கிறார் என்ற பயமும் கூடவே தோன்றியது. அவர் பிடியில் சிக்காமல் பின்னுக்குச்சென்றான்.

அன்றையிலிருந்து அவன் தன்னிடமிருந்து பிரிந்து செல்வது மாதிரி மாணிக்கத்திற்குத் தோன்றியது. அந்நினைவுவந்ததுமே அவர் எரிச்சலுற்றார். தன் இருக்கையைவிட்டு, விரைவாக எழுந்து வெற்றிலைப் பெட்டியை எடுத்துக் கொண்டு வந்து திண்ணையில் உட்கார்ந்தார். எத்தனை வெற்றிலை போட்டு எவ்வளவு சுண்ணாம்பு வைத்து இடிப்பது என்பதெல்லாம மறந்து போய் விட்டது. வெறறிலைப் பெட்டியை ஒரு பக்கமாகத் தள்ளி வைத்து விட்டு தெருவுககும் வீட்டுக்குமாக நடந்து கொண்டிருந்தார்.

சற்றைக்கெல்லாம் ராமு அவசர அவசரமாக ஓடி வந்தான். மாணிக்கம் நிதானமாக அவனை ஏறிட்டுப் பார்த்தார். அவனுக்கு வெட்கமாக இருந்தது. தன் மேலேயே குறைபட்டுக் கொண்டான். முற்றத்திற்கு ஓடி, கையலம்பிக் கொண்டு வந்து வெற்றிலை இடிக்க ஆரம்பித்தான்.

இடித்த வெற்றிலையை வாங்கி வாயில் திணித்துக் கொண்டு, “செத்த முன்னே எங்கே போயிருந்தே?” என்று கேட்டார் மாணிக்கம்.

“அந்தப் பெரிய மீனு......”

கெக்கெக்கெவென்று பெரும் சிரிப்பு வெளிப்பட்டது. அவன் ஆச்சரியத்தோடு தாத்தாவைப் பார்த்தான்.

“அதைப் பிடிக்கப் புறப்பட்டுட்டியோ?” அவர் குரல் திடீரென்று உயர்ந்தது.

“அதை உன்னாலேயும் பிடிக்க முடியாது; ஓங்கப்பனாலேயும் பிடிக்க முடியாது”

ராமு ஓரக்கண்ணால் தற்பெருமை அடிக்கும் தாத்தாவைப் பார்த்தான.

“என் ரெண்டு தூண்டிலை அறுத்துக்கிட்டுப் போயிடுச்சு...” அந்தப் பெரிய மீன் ஒரு தூண்டிலை அறுத்துக்கொண்டுபோனது அவனுக்குத் தெரியும். மூன்று நாட்களுக்கு முன்னால் ஒரு காலைப பொழுதில் அது நடந்தது. மாணிக்கம் பெரிய கயிற்றுத்தூண்டி வீசியிருந்தார். அதனை ஒரு மீனும் அறுத்ததில்லை. அநேகமாக மீனினால் அறுக்க முடியாத தூண்டில் அது.

கயிற்றுத் தூண்டிலை வீசிய சற்றுநேரத்திற்கெல்லாம் தக்கை சர்ரென்று அழுந்தியது. கீழே சென்ற வாக்கில் மேலே வந்தது. எம்பிக்குதித்து ஆடியது.

ராமு கயிற்றைப் பிடித்து இழுத்தான். ஏநோ ஒன்று வெடுக்கென்று உள்ளுக்கு இழுத்தது. பெரிய மீன் இரையைத் தின்ன ஆரம்பித்துவிட்டது தெரிந்தது. அவன் விரைந்தோடிச் சென்று தாத்தாவை அழைத்துக் கொண்டு வந்தான்.

“அதுக்குள்ளே அம்புட்டுக்கிச்சா” என்று வந்த மாணிக்கம் புன்னை மரத்தில் கட்டியிருந்த கயிற்றை அவிழத்துப் பிடித்துக் கொண்டு தக்கையை நோட்டமிட்டார். பெரிய தக்கை; பொய்க்கால் குதிரை மாதிரி குதியாட்டம் போட்டது. இன்னும் மீன் இரையை விழுங்கவில்லை என்று அவருக்குத் தோன்றியது. கயிற்றைத் தாராளமாக விட்டார். குதியாட்டம் போட்டுக் கொண்டிருந்ததக்கை, குறுக்காகக் கீழே அமுங்கியது. இரையை உள்ளுக்கு இழுத்துக் கொண்டுபோய் மீன் விழுங்குகிறது என்பதை உணர்ந்து கொண்டார். அவர் கை விரைவாகக் கயிற்றை இழுத்துப் பிடித்தது. மீன் ஆத்திரத்தோடு உள்ளுக்குள் வெடுக் வெடுக் வெடுக்கென்று இழுத்தது. அனுமானம் சரி. மீன் இரையை விரைவாக விழுங்குகிறது தூண்டில்முள் தொண்டையிலே குத்திக் கொள்ள நூலைத் தளரவிட்டு மீன் ஆர்பாட்டத்தைத் துவக்குவதற்கு முன்னே பரபவென்று இழுத்துப் போடவேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டார் மாணிக்கம்.

அவர் கண்கள் வசதியான இடத்தைத் தேடின. புன்னை மரச் சரிவில் நின்றுகொண்டு கயிற்றை விர்ரென்று இழுத்தார். இரண்டு பாகம் தடையின்றி இழுக்கும்போது மீன் உள்ளுக்குளிருந்து வாலால் தண்ணீரைப் படாரென்று அடித்தது. மாணிக்கம் கயிற்றைத் தளரவிட்டு, முழு பலத்தோடு இழுத்தார். வேகமாக மேலே வந்த மீன் திடீரென்று தாவிக் குதித்தது. தண்ணீரைக் கலக்கியது. கயிறு அறுந்து போக மாணிக்கம் சறுக்கிக் கொண்டே வந்து குளத்தில் விழுந்தார்.

ராமு ஓடிவந்து தாத்தாவைத் தூக்கினான். கணுக்காலுக்குக் கீழேயிருந்துவழிந்தரத்தத்தைத் துடைத்து விட்டான்.

“மீனு தப்பிச்சிடுச்சா?”

“செத்தப் பொறுத்திருந்தா புடுச்சிருக்கலாம் தாத்தா.”

மாணிக்கம் முட்டியைத் தடவி விட்டுக்கொண்டே அவனைப் பார்த்தார். அவன் கழுத்தைத் திருகி வீசியெறிய வேண்டும் போல ஒரு உணர்ச்சி ஏற்படடது.

“எதுக்காக இங்கயே நிக்கறே?’ என்று உறுமினார். அவர் குரல் திடீரென்று உயர்ந்தது அவன் சற்றே ஒதுங்கித் தாத்தாவைக் கடைக்கண்ணால் நோக்கினான்; அப்புறம் ஒதுங்கி மரங்களின் பின்னே மறைந்தான்.

மாணிக்கம் கரைக்கு வந்தார். அவர் மனம் முறிந்துவிட்டது. துக்ககரமான உணர்ச்சி பரவ, தலைகவிழ்ந்தவாறே வலம் வந்துவிட்டு, இருட்டிய பின்னால் வீட்டிற்குச் சென்றார். ராமு சின்னத் திண்ணையில் தூங்கிக் கொண்டிருந்தான். அதைப் பார்த்ததும் ஆழ்ந்த நிமமதியான மூச்சு வந்தது அவருக்கு.

பெரிய மாடத்திலிருந்து அரிக்கேன் விளக்கை எடுத்துச் சாம்பல் போட்டு பளபளக்கத் துலக்கித் துடைத்தார். நிறைய மண்ணெண்ணெயை ஊற்றினார். சாப்பிட்டுவிட்டு ஈட்டியும் விளக்குமாகக் குளத்தை நோக்கி நடந்தார் மாணிக்கம். தேய்பிறை நிலவு. நேரம் செல்லச் செல்ல நிலவு கூடிக்கொண்டு வந்தது.

குளத்தில் ஒரு விரால் தன் குஞ்சுகளை அழைத்துக் கொண்டு பவனி வந்தது. பெரிய விரால். அநேகமாக நான்கைந்து ரூபாய் பெறும். அதே மாதிரி இன்னொரு விரால் கீழே வரும். மற்றொரு சந்தர்ப்பமாக இருந்தால் மாணிக்கம் இரட்டிலொன்றை வேட்டையாடி இருப்பார். ஆனால் இப்போழுது அவர் இல்ட்சியம் விரால் அல்ல. தண்ணீரை அலங்க மலங்க அடித்த வாளை, ஆற்றிலிருந்து புதிதாகக் குளத்திற்கு வந்திருக்கும் வாளை. அதுதான் அவர் குறி. குளத்தில் ஏற்படும் ஒவ்வொரு சலசலப்பையும் உன்னிப்பாகக் கவனித்தபடியே குளத்தைச் சுற்றி வந்தார் நாவற் பழங்கள் விழும் சப்தத்தைத் தவிர வேறு ஓசையில்லை. குளம் நிசப்தமாக இருந்தது அநேகமாக மீன் வந்த வழியே திரும்பிச் சென்று விட்டதோ என்ற எண்ணமும் தோன்றியது. விளக்கைச் சற்றே பெரியதாக்கி எட்டிய வரையில் குளத்தை ஊடுருவி நோக்கினர் தெற்கு முனையைத் தாண்டும்போது வாளை கண்ணில் பட்டது. வேகமாக வாலைச் சுழற்றி ஒரு கெண்டைக் கூட்டத்தைச் சாடியது.

மாணிக்கம் நின்ருர். அவர் பார்வை தீர்க்கமாக, விரால் வீச்சில் இறந்த கெண்டைகளை விழுங்கும் வாளை மீது விழுந்தது. சற்று நேரம் இங்கேயே வாளை இருக்கும். இப்பொழுதுதான் வேட்டையைத் துவக்கியிருக்கிறது. பசியாற வேட்டையை முடித்துக் கொண்டு புறப்படுவதற்கு நேரமாகலாம்......

அவர் வசதியான இடத்தைத் தேடிப் பிடித்தார். விளக்கு பெரிதாகி வெளிச்சத்தை உமிழ்ந்தது; நிலவும் பளிச்சென்று இருந்தது. சரியான நேரம். வாளை, கொன்ற இரையை அவசரமின்றி விழுங்கிக் கொண்டிருக்கிறது. மாணிக்கம் தன்னிடத்தை மாற்றினர். இரண்டடி முன்னே சென்று ஈட்டியை மேலே உயர்த்தினர்.

நீரில் ஒரு சுழிப்பு; எங்கிருந்தோ ஒரு பெரிய கெண்டை குறுக்காக எழும்பிப் பாய்ந்தது. ஈட்டி அதன் செதில்களைப் பிய்த்துக் கொண்டு சென்றது. எல்லாம் ஒரு நிமிஷத்தில் வீணாகிவிட்டது. அவர் நினைத்தது மாதிரி ஒன்றும் நடக்கவில்லை. சோர்வுற்ற மனத்தோடு, குளத்தில் இறங்கி, ஈட்டியைத் தேடி எடுத்துக்கொண்டு கரைக்கு வந்தார்.

மீன் கலவரமுற்றுவிட்டது. அதனுடைய ஆர்பாட்டத்தையும் குதூகலம் நிறைந்த விளையாட்டையும் காணோம். மாணிக்கம் கால்கள் சோர்வுற கரையோரமாகச் சுற்றி வந்தார். மீன் குளத்தில் இருப்பதற்கான ஒரு தடயமும் கிடைக்கவில்லை. சலிப்பும் சோர்வும் மிகுந்தது. கோழி கூவும் நேரத்தில் விளக்கும் ஈட்டியுமாகத் தள்ளாடிக் கொணடே வீட்டிற்குச் சென்ருர் மாணிக்கம்.

அடுத்த நாள் வெகு நேரம் வரையில் அவரால் ஒன்றும் செய்ய முடியவில்லை. பலவீனமுற்றுப்போனர். மனத்தில் ஏக்கமும் கவலையும் நிறைந்தது. மீனைப் பற்றி ஆத்திரம் நிறைந்த உணர்ச்சி திடீரென்று தோன்றியது. அந்தக் கணத்திலேயே எழுந்து உட்கார்ந்தார். "ஒன்னு நான்; இல்லே அது... ரெண்டு பேருக்குமிடையே இருக்கும் கணக்கைத் தீர்த்துக் கொள்ளனும்."

பரண்மீது ஏறி இரண்டாண்டுகளுக்கு முன்னே கட்டிப்போட்ட தூண்டிலை எடுத்துக்கொண்டு குளத்திற்குச் சென்ருர்.

குளத்தங்கரையில் பெரிய மீன் துள்ளிக் குதித்து விளையாடுவதைப் பார்த்துக்கொண்டு ராமு உட்கார்ந்திருந்தான். மாணிக்கத்தின் முதல் பார்வை மீன் மீதும் இரண்டாம் பார்வை ராமுமீதும் விழுந்தது.

தலையசைத்து அவனை அருகே அழைத்தார். அப்புறம் தனக்கே கேட்காத குரலில் "என்ன பண்ணிக்கிட்டிருக்கே" என்று வினவினர்.

அவன் மௌனமாக இருந்தான்.

"உன்னைத்தான் கேட்கறேன்" காதைப் பிடித்து, தன் பக்கம் இழுத்தார். "எம்மா நேரமா ஆயா தேடிக்கிட்டிருக்கா. நீ இங்கே வந்து குந்தியிருக்கே..." என்று தள்ளினர். கீழே விழுந்து எழுந்த ராமு, தாத்தாவின் விகாரமான முகத்தைப் பார்த்து துணுக்குற்ருன்.

அவன் அவர் பார்வையிலிருந்து மறைந்தபின்னல் குளத்தில் வாளை எழும்பிக் குதித்தது; தண்ணீர் நாலாப் பக்கமும் சிதறின.

"எவ்வளவு பெரிய மீன்... ராஜா மாதிரி..." மாணிக்கம் மீசையை ஒரு பக்கமாகத் தள்ளி விட்டுக் கொண்டு வடிகால் பக்கம் நடை போட்டார்.

மீன் வடிகால் பக்கத்தில் சுற்றிக் கொண்டிருப்பது தெரிந்தது. வெளியில் ஓடிப்போக இடம் தேடுகிறது. மாணிக்கம் அவசர அவசரமாகக் கலயத்திலிருந்து ஓர் உயிர்க் கெண்டையை எடுத்து அப்படியும் இப்படியும் திருப்பிப் பார்த்தார். சரியாக வளர்ச்சியுற்ற இரை; முள்ளில் கோர்த்து விட்டால் இரண்டு மணி நேரத்திற்குமேல் தங்கும். மீன் இங்கேயே இருப்பதால் அநேகமாக இந்தக் கெண்டையிலேயே பிடித்து விடலாம். கெண்டையைச் சாய்த்துப் பிடித்து, நான்கைந்து செதில்களை முள்ளாலேயே பெயர்த்து விட்டு, நடுமுதுகில் தூண்டி முள்ளைச் செருகி தூண்டிலைத் தண்ணீரில் போட்டார். சின்னமீன் நன்ருக ஆடியது; தக்கை குத்திட்டு அசைந்தது. இரை வாளையை எப்படியும் கவர்ந்திழுத்து விடும் என்ற எண்ணம் நேரஞ் செல்லச் செல்ல வலுவடைந்து கொண்டே வந்தது.

சப்தம் செய்யாமல் நீரில் இறங்கி தூண்டிலை அல்லிக் கொடியோரமாக வீசினர். தக்கை வேகமாக அசைந்தாடிக் கொண்டு போய் அல்லி இலையில் செறுகிக் கொண்டது. ஒரு பக்கமாக இழுத்து விட்டார். மெல்ல மெல்ல தக்கையின் அசைவு குறைந்தது. கண்களை இடுக்கிக் கொண்டு தக்கையைப் பார்த்தார். தக்கையின் ஆர்ப்பரிப்பு முழுவதும் அடங்கி ஒடுங்கியது; இரை இறந்துவிட்டது. மாணிக்கம் மீண்டும் நீரில் இறங்கி தூண்டிலை இழுத்து இரையைத் தண்ணீரில் சுழற்றிச் சுழற்றி அடித்தார். சின்ன மீன் பஞ்சு பஞ்சாய் சிதறி நாலா பக்கமும் பறந்தது.

வெறும் தூண்டிலைச் சுருட்டிக் கொண்டுவந்து மரத்தடியில் உட்கார்ந்தார். இப்பொழுது ஒவ்வொன்றின்மீதும் ஆசாபங்கம் ஏற்பட்டது. ராமுவை இழுத்துக்கொண்டு வந்து நான்கு அறைகள் கொடுத்துத் தண்ணீரில் மூச்சுத் திணறத்திணற அமுக்கவேண்டும் போல வெறி உணர்ச்சி தோன்றியது. அதே நினைப்போடும், ஆத்திரத்தோடும் இன்னொரு கெண்டையை எடுத்துத் தூண்டிலில் செருகிக் குளத்தில் தூடிலைண் வீசினர்.

தூண்டில் விழுந்ததும் நீர் பெரிதாகச் சுழித்தது. வாளைமீன் உல்லாசமாக விளையாடியது. மாணிக்கம் மீசையை ஒரு பக்கமாகத் தடவி விட்டுக்கொண்டு நெளிய மரத்தில் நன்ருகச் சாய்ந்தார்.

வழக்கத்திற்கு மாருன சில பழக்கங்கள் அவரிடம் தோன்றின. தனக்குத் தானே பேசிக்கொள்ள ஆரம்பித்தார்.

"இவளை ஏமாத்திப்புட்டு எங்கேயும் போயிட முடியாது" என்று மீனுக்கு அறைகூவல் விட்டார். உல்லாசமான சீழ்க்கையொலி அவரிடமிருந்து பிறந்தது.

தக்கை அசைந்தது. பெரிய மீன் வந்துவிட்டது.

மாணிக்கம் எழுந்து நின்ருர்.

மீன் வாலால் தண்ணீரை அடித்தது. மேலே வந்து வாயைத் திறந்து மூச்சுவிட்டது. அப்புறம் வேகமாகக் கீழே அமுங்கியது. சரசரவென்று நீர்க் குமிழிகள் தோன்றின; மீன் கிழக்கே சென்றது.

தெற்குப் பக்கத்தில் பூவரசு மரத்திலிருந்து ஒரு மீன்குத்திக் குருவி நீரில் குதித்து எழுந்து பறந்தது கொக்கு ஒன்று தாழப் பறந்து அல்லி இலையில் அமர்ந்தது.

மாணிக்கம் தூண்டில் கயிற்றைச் சற்றே இழுத்துப் பிடித்தார். தக்கை மெல்ல அசைந்தாடிக்கொண்டிருந்தது. விராலோ கெண்டையோ வராமல் இருந்தால் பெரிய மீனைப் பிடித்துவிடலாம்.

கரையேறி வடக்குப் பக்கமாக நடந்து இலுப்பை மரத்தடியில் உட்கார்ந்து சுருட்டை எடுத்து பற்ற வைத்தார். சுருட்டு ஒன்று, இரண்டாய்ப் புகைந்து போயிற்று. ஆனல் குளத்தில் எவ்வித ஆரவாரமும் சுழிப்புமில்லே. நீர்நிலை வியக்கத் தகுந்த அமைதியோடு இருந்தது.

கொக்கு மேலே எழும்பிப் பறந்து சென்றது.

பொழுது நிசப்தமாக அடங்கிக் கொண்டிருந்தது.

மாணிக்கம் சோர்வோடு எழுந்து வீட்டிற்குச் சென்ருர். ராமு, கண்ணியைச் சரி பார்த்துக் கொண்டிருந்தான். அதைப் பார்த்தவுடன் ''எலே எப்ப சொன்ன வேலே. இப்பத்தான் செய்யுறியா?'' என்று உறுமினர்.

அவன் பதிலொன்றும் சொல்லவில்லே. மௌனமாகத் தலே குனிந்தபடியே குதிரை மயிருக்கு எண்ணெய் தடவி சிக்கலைப் பிரித்துக் கொண்டிருந்தான்.

''எலே கேக்கறது காதிலே உளுவுதா'' சின்னத் திண்ணைக்குத் தாவி அவன் தலேமயிரைப் பற்றினர்.

அவன் தலே நிமிர்ந்தான். கண்களில் நீர் துளும்பியது. தாத்தா முகத்தில் மண்ணெண்ணெய் ஊற்றிக் கொளுத்த வேண்டும் போல ஓர் ஆத்திர உணர்ச்சி தோன்றியது.

''நேத்தியிலேருந்து என்ன பண்ணினே ?'' தலேயை அசைத்து மேலே தூக்கினர்.

''எதுக்கு அவனைப் போட்டு இப்படி ரெண்டு நாளாக் கொல்றீங்க?''

''பின்ன தரித்திரத்தைத் தலேயிலா தூக்கிவச்சிக்குவாங்க?''

''இப்படி அடிச்சுக் கொல்ல நாதியில்லாமயா ங்க ளாவா போயிட்டோம்?''

''எட்டுக் கட்டு சனமூண்டு உனக்கு.''

''டிவ செத்த அன்னக்கே தெரிஞ்சிச்சே.''

''என்னடி சொன்னே திருடன் மவுளே'' என்று அவள்மீது பாய்ந்து கன்னத்தில் அறைந்தார். தலே மயிரைப் பற்றி சுவற்றில் மோதினர்.

''நல்லா கொல்லு எங்க ரெண்டு பேரையும் தின்னுப்புட்டு நடுச் சந்தியிலே நில்லு'' என்று ஒவ்வொரு அடிக்கும் சொல்லி அழுதாள்.

''வாயை மூடு.''

அவள் குரல் உயர்ந்தது.

மாணிக்கம் இடுப்பில் போட்டிருந்த பெரிய பெல்ட்டைக் கழற்றினர்.

''போ உள்ளே.''

''என்னைக் கொல்லு. உன்னைத்தான் கட்டிக்கு வேன்னு சாதி சனத்தை யெல்லாம் வுட்டுட்டு வந்தேனே அதுக்கு இந்தப் பச்சை மண்ணுேடு என்னையுங் கொல்லு.''

''பெரிய ரம்பை இவ; நா இல்லாட்டா ஆயிரம் பேரு வந்திருப்பான்.''

அவர் பெல்ட் மார்பிலும், கன்னத்திலும் பாய்ந்தது. அவள் துடித்துக் கீழே விழுந்து ஓலமிட்டு அலறினுள். பக்கத்து வீடுகளிலிருந்து ஒவ்வொருவராக ஓடிவா ஆரம்பித்தார்கள். மாணிக்கம் பெல்டை ராமு முகத்தில் வீசியெறிந்து விட்டுத் திண்ணையில் சாய்ந்து படுத்தார். அவளோ ஒவ்வொரு பழைய கதையையும் விஸ்தாரமாகச் சொல்லி அழுது கொண்டிருந்தாள். அவள் சொன்னவை மனத்தைத் தொட்டு இரங்க வைத்தன. பதினேறு ஆண்டுகளுக்கு முன்னுல் விட்ட சண்டையை மறுபடியும் துவக்கியதற்காக வருத்தமுற்ருர்.

அவருடைய ஒரே மகள், கல்யாணமான இரண்டாம் வருடம் ராமுவை விட்டுவிட்டுக் காலமானதும், மனமொடிந்து போனர். அம் மனமுறிவின் விளைவாகவே மனைவியோடு சண்டை போடுவதும் நின்றது. துக்கம் பெருகப் பெருகக் கோபம் நீற்றுச் சாம்பலாகியது. ஆனல் இன்றைக்குத்தான்ரொம்ப தூரம் சென்று விட்டதாக எண்ணினர். சண்டையை விட்ட இடத்திலிருந்து துவக்கியதற்காக அவநம்பிக்கையான உணர்ச்சி பரவியது.

மகளைப் பற்றிக் கவிபுனைந்து அலற்றிக் கொண்டிருந்தாள் அவர் மனைவி. தான் உயிருக்கு உயிராக நேசித்த மகளின் நற்பண்புகள் விவரிக்கப் படுகையில் அவரால் தாள முடியவில்லே. மெல்ல எழுந்து நடக்கலானர். கால்கள் குளத்தை நோக்கிச் சென்றன.

பெரிய குளம் அமைதியாக இருந்தது. தூண்டில் அருகில் சென்று பார்த்தார். தக்கை மட்டுமே குதியாட்டம் போட்டுக் கொண்டிருந்தது. தன்னுடைய வழக்கத்திற்கு மாருகத் தூண்டிற் கயிற்றை இழுத்துக் கொண்டு போய் கிழக்கே வீசினர். அது ராமு இடம். அங்குதான் அவன் தூண்டில் போடுவான். அவன் அதிர்ஷ்டத்தைச் சோதித்துப் பார்ப்பது மாதிரி தூண்டிலே வீசிவிட்டுக் கரையேறினர்.

குளம் சலிப்புத் தரும் விதத்தில் அமைதியாக இருந்தது. சீழ்க்கை அடித்துக் கொண்டு கொன்னை மரத்தடியில் அமர்ந்தார், மாணிக்கம். களைப்பும் சோர்வும் மிகுந்தன. சாப்பிட வேண்டும் போலத் தோன்றியது. ''உம்...'' என்று உறுமிக் கொண்டு மரத்தடியில் சற்றே தலே சாய்ந்தார். சற்றைக் கெல்லாம் ஆழ்ந்த குறட்டையொலி கேட்டது.

கண் விழித்தபோது மணி ஏழுக்கு மேலாகிவிட்டது. சந்திரவொளி குளத்தில் மெல்லப் பரவிக் கொண்டி

ருந்தது: மாணிக்கம் வேகமாகச் சென்று தூண்டிலைப் பார்த்தார். குதித்தாடும் தக்கையைக் காணோம். கோரையைப் பிடித்துக் கொண்டு குளத்தில் இறங்கி தூண்டிலை இழுத்தார். கயிறு தடையின்றி லேசாகி வந்தது. சிறு கயிறு. பாதிக் கயிற்றை மீன் அறுத்துக் கொண்டு போய்விட்டது. இப்படிச் சென்றது விராலா, வாளையா, என்பது தெரியவில்லை. இரண்டும் இல்லாமல் ஆமையாகக் கூட இருக்கலாம். உறுதிப் படுத்திக் கூறும் தடயம் ஏதுமில்லை. எதுவானாலும் சரி, இன்னொரு தூண்டில் சென்று விட்டது. ஒரு பொழுதும் நடககாதவையெல்லாம் நடந்துகொண்டுவருகின்றன.

சாப்பிட்டுவிட்டு இரண்டு உருண்டை நூலையெடுத்து ஒன்றோடொன்றைச் சேர்த்து முறுக்கேற்றினார். முறுக்கேற ஏற நூல் தடித்தது. ஆனாலும் திருப்தி ஏற்படவில்லை. அந்த மீனைப் பிடிக்க அந்த நூல் கயிறு தாங்காது. கொஞ்சம் பலமாக இழுத்தால் தெறித்து அறுந்து விடும் போலப் பட்டது.

"அப்ப கும்மோணம் ஒருவாட்டிபோய் வரணும்" என்று சொல்லிக் கொண்டே முள்ளைக் கட்டினார். கட்டியதுமே கயிறு தாளுமா என்ற ஐயம் வந்தது. கடைசிப் பகுதியை இரு கைகளிலும் சுற்றிக்கொண்டு ஒரு வெட்டு வெட்டி இழுத்தார். கயிறு பட்டென்று தெறித்தது.

"சை" என்று எரிச்சலோடு விளக்கை ஊதி அணைத்து விட்டுப் படுத்தார்.

முன்னிரவு. தூண்டிலை வீசியதும் வாளைமாட்டிக் கொள்கிறது. கயிற்றைப் பர பரவென்று இழுக்கிறார். தடங்கலின்றி மீன் வந்து கொண்டிருக்கிறது. ஒரே ஆனந்தம். கரைக்கு வந்த மீன் தண்ணீருக்குள் தாவிக் குதிக்கிறது. மாணிக்கம் எம்பி மீன் மீது உட்கார்ந்து கொள்கிறார். கீழே கீழே என்று பாதாளத்திற்கு மீன் செல்கிறது. மூச்சு திணறுகிறது. தாளமுடியவில்லை. 'ஹா' என்று அலறுகிறார். எல்லாம் கனவு என்றதும் மனத்தில் திருப்தி உண்டாகிறது. அப்புறம் படுக்க முடியவில்லை. தலையணையைச் சுவரில் சாத்தி, அதில் சாய்ந்துகொண்டு சுருட்டுப்புகைக்கிறார்.

கோழிகள் கூவுகின்றன; காகம் கரைகின்றது.

"வாங்க, அந்த வாண்டு என்ன கொண்டாந்திருக்குன்னு வந்து பாருங்க" என்று அவரின் இரண்டு கைகளையும் பிடித்து கொல்லைக்குஅழைத்துக்கொண்டு ஓடினாள் அவள்.

கிணற்றடியில் சேறும் நீரும் சொட்டச் சொட்ட ராமு நின்று கொண்டிருந்தான். அவன் காலடியில் பெரிய வாளை தாடையை அசைத்துக் கொண்டிருந்தது.

"நம் வாண்டு எம்மாஞ் சமத்துப் பாத்திங்களா?"

மாணிக்கத்தின் கைகள் அவன் தோள்மீது விழுந்தது. அப்புறம் கழுத்தில் உராய்ந்து காதிற்குச் சென்றது.

"ஆத்தா" என்று அலறிக்கொண்டு ஓடிப் பாட்டியின் பின்னே மறைந்தான்.

தன் மனைவியை நோக்கி மெல்லச் சிரித்தார் மாணிக்கம்.

❁

## சகுனம்

நீண்டதொரு காலம் போய்,
மீண்டுமொரு சந்திப்பு.
அதற்கென விரைவாய் அடியெடுத்து வைத்தேன்
நிலைக்கும் அப்பால் தெருவிலே வந்தேன்.
உற்சாகம் குமிழிட்டு உள்ளத்தை விரித்து.
நடையினிலே நான் மிதந்தேன்.
பசபசவென்று உடலெடுத்த
பூனையொன்று குறுக்கிட்டது.
சீயென்றேன். தூவென்றேன்.
காணக் கூசினேன் பூனையை
திரும்பிவிட அடிவைத்தேன்.
துள்ளி விழுந்தது,
துரிதமாய் வந்த காரினடியில்
துடித்துப் புரண்டது, பூனை.
மனங் குழறிக் குமைந்தேன்.
கூசினேன்—என்னைக் காட்டிக்கொள்ள!

— கோ. ராஜாராம்.

## மனித பாவங்கள்

இரட்டைத் தடங்களில்
எதிர்ப் பட்ட ரயில்கள்
ஒன்றை ஒன்று கண்டதும்
கண் சிமிட்டிக் கொண்டன
பொறி பறந்தது
நெருங்கி வந்ததும்
வந்தனம் கூறின
குழ லொலித்தது
பிரிந்து போகையில்
இகழ்ச்சி நிரைத்து
எச்சில் துப்பின
என் முகத்தில் கரி அடித்தது—
தடங்களைக் கடக்கையில் தெரிந்தது
ரயில்களின் சினேகிதம் கண்டு
கட்டைகள் குலுங்கிச் சிரிப்பது

—பாலகுமாரன்.

# ஒரு கம்யூனிஸ்டின் வார்த்தை

ஆர். சுவாமிநாதன்

வாழ்க்கையில் புரட்சிகரமான கண்ணோட்டமில்லாத கலைஞர்கள் நல்ல கலைஞர்கள் இருக்கக் கூடும். அப்படிப்பட்ட கலைஞர்களுக்கும் அறிவாளிகளுக்கும் தான் புரட்சி ஒரு பிரச்னையாகக் காட்சி தருகிறது.

சுரண்டல் கலைஞனுக்கோ அயோக்கியக் கலைஞனுக்கோ புரட்சி ஒரு பிரச்னையே இல்லை. தான் செய்ய வேண்டியது என்ன, தனக்குச் சாதகமானது எது, தான் எங்கே போகிறோம் இதை அவர்கள் நன்கு அறிவார்கள்.

வாழ்க்கையில் புரட்சிகரமான கண்ணோட்டமில்லாத ஆனால் நாணயமான மனிதர்களாக உள்ள கலைஞர்களுக்கும் அறிவாளிகளுக்கும்தான் நிஜமான பிரச்னைகள் எழுகின்றன. அப்படிப்பட்ட கண்ணோட்டமுள்ள மனிதர்களுக்கு என்று வாழ்க்கையில் சில நோக்கங்கள் லட்சியங்கள் இருக்கும். அந்த நோக்கங்கள் லட்சியங்கள் யாவை என்று நாம் கேட்கிறோம். புரட்சியாளனுடைய நோக்கம் தற்போதைய சூழ்நிலையை மாற்றி அமைப்பது. அவனுடைய லட்சியம் மனிதனுக்கு மீட்சி ஏற்படுத்தித்தருவது. புரட்சியாளனுடைய லட்சியம் மனிதனே. மனித வர்க்கமும் அதன் மீட்சியும் புரட்சியாளர்களான நம்மிடம் நாம் மிகுந்த அக்கறை காட்டும் விஷயம் எது என்று பிறர் கேட்பார்களேயானால் நாம் சொல்லுவோம் மக்கள் என்று. என்றும் சொல்லுவோம் மக்கள் என்று அந்த வார்த்தையின் உண்மையான அர்த்தத்தில் மக்கள்; பெரும் பான்மையான மக்கள் சுரண்டலிலும் கொடூரமான ஒடுக்கத்திலும் வாழ நேர்ந்த மக்கள். நம்முடைய அடிப்படை விசாரம் மிகப் பெரும்பான்மையான மக்கள் பற்றியதாகவே இருக்கும்; ஒடுக்கப்பட்ட சுரண்டப்பட்ட வர்க்கங்கள் பற்றியதாகவே இருக்கும். எந்த ஒரு விஷயத்தையும் நாம் இந்தக் கோணத்திலிருந்தே காண்போம். அவர்களுக்கு நன்மையானது எதுவோ அது நமக்கும் நன்மையானது. அவர்களுக்கு உபயோகமானது, உயர்ந்தது, அழகானது எதுவோ அது நமக்கு உபயோகமானது, உயர்ந்தது அழகானது. மக்களைப்பற்றியும் மக்களுக்காகவும் சிந்திக்காதவர்கள் பெருவாரியான சுரண்டப்பட்ட மக்கள் கூட்டத்திற்காகச் சிந்தித்து செயலாற்றாதவர்கள் மந்தை ஜனங்களுக்கு மீட்சி ஏற்படுத்த விழையாதவர்கள்-இவர்கள் புரட்சிகரமான கண்ணோட்டம் இல்லாதவர்கள்.

இந்த ஒரு கோணத்திலிருந்துதான் நாம் எல்லாக் காரியத்தின் நன்மை, உபயோகம், அழகு இவற்றை ஆராய்வோம்.

இந்த விஷயத்தை சிலர் நன்றாகவே புரிந்து கொள்கிறார்கள். ஆயினும் இதற்காகப் போராடத் தாங்கள் தயாராக இல்லை என்றும் சொல்கிறார்கள். உண்மையிலேயே துரதிருஷ்டவசமானது இது.

நாம் புரட்சியாளர்கள் அல்லது அப்படி நம்புகிறவர்கள். தன்னைப் புரட்சியாளன் என்பதைக் காட்டிலும் கலைஞன் என்று நம்புகிறவன் நம்முடன் ஒத்து சிந்திக்க முடியாது. இதை நாம் உணர்கிறோம். உள்மனக் குழப்பமின்றி மக்களுக்காக வேண்டி நாம் போராடுகிறோம். நாம் அடைய நினைப்பதை அடைந்தே தீருவோம். அந்த நம்பிக்கை நமக்குண்டு. நம்முடைய முக்கிய லட்சியம் மக்கள். நம்மைப்பற்றி நினைப்பதின் முன்னர் நாம் மக்களைப்பற்றி நினைக்க வேண்டும்; இந்த ஒரு கண்ணோட்டம்தான் உண்மையான புரட்சிக் கண்ணோட்டம் என்று சொல்ல வேண்டும். இப்படிப்பட்ட கண்ணோட்டம் இல்லாதவர்கள் ஆனால் நேர்மையானவர்கள், அவர்களுக்குத்தான் பிரச்னைகள் எழுகின்றன. புரட்சி அவர்களுக்கு பிரச்னைகள் தோற்றுவிக்கிறது. புரட்சி சம்பந்தமட்டில் அவர்களும் நாம் மனதில் கொள்ளவேண்டிய பிரச்னைக்குரியவர்கள்.

அநேக இலக்கிய ஆசிரியர்கள், கலைஞர்கள் புரட்சியாளர்கள் அல்லர்; ஆயின் நேர்மையான கலைஞர்கள்; புரட்சிக்காக உதவி செய்ய விரும்புகிறார்கள். புரட்சியும் அவர்கள் உதவியில் நாட்டம கொண்டுள்ளது. புரட்சிக்காக அவர்கள் உழைக்கத் தயாராய் இருக்கிறார்கள். அதே நேரத்தில் புரட்சி அவர்களது அறிவாற்றலையும் முயற்சியையும் பயன்படுத்தி கொள்வதில் அக்கறை காட்டுகிறது என்று இங்கேபேசப்பட்டது.

சிலகுறிப்பிட்ட நபர்களைப்பற்றி அலசமுற்பட்டால் இந்த விஷயம் இன்னும் தெளிவாகப் புலப்படும். அலசலுக்கு உட்படாத சில சிக்கலான பிரச்னைகளுடைய நபர்களும் இருக்கிறார்கள். ஒரு கத்தோலிக்க எழுத்தாளர் இங்கு பேசினார். தன் சம்பந்தப்பட்ட பிரச்னைகளை மிகத்தெளிவாக எடுத்துச் சொன்னார். குறிப்பிட்ட பிரச்னைகளைத் தன்னுடைய லட்சியவாதக் கொள்கையின் (idealistic pont of view) அடிப்படையில் விளக்கிச் சொல்வது சாத்தியமா என்றும் அந்தக் கொள்கைக்கு ஆதரவான படைப்புகளைஎழுதக்கூடுமா என்றும் அவர் கேட்டார்.

புரட்சியாளர்களின் ஆட்சியில் தன்னுடைய மன நெகிழ்வுகளுக்கு ஏற்ப எழுதமுடியுமா என்று அவர் ஒளிவின்றிக் கேட்டார். புரட்சி சித்தாந்தத்திற்கு ஒத்துவராத இன்னொரு சித்தாந்தத்தின் அடிப்படையில் எழுத முடியுமா என்றுதான் அவர் கேட்கிறார். பொருளாதார சமூக விவகாரங்களைப்பொறுத்தமட்டில் அவர் புரட்சியோடு ஒத்துப் போகிறவர். தத்துவ நியாயத்தில் மட்டும் புரட்சியிலிருந்து வேறுபடுபவர். இவருடைய உதாரணம் நம்மனதில் நன்கு பதிய வேண்டும். ஏனெனில் இவரைப் போலவே அநேகம் கலைஞர்கள் இருக்கிறார்கள். புரட்சியினிடம் பரிவு கொண்டவர்கள். புரட்சிகரமான அமைப்பில் தங்களுடைய உணர்ச்சிகளுக்கு ஏற்ப எழுதுவதற்கு எந்த அளவிற்குச் சுதந்திரம் உண்டு என்று கேட்பவர்கள் இவர்கள்தான் புரட்சிக்குப் பிரச்னையாய்இருப்பவர்கள். இவர்களுக்குப் புரட்சி பிரச்னை ஆனது. இவர்கள் விஷயத்தில் புரட்சி அக்கறை காட்டவேண்டும் இவர்களுடைய நிலைமையைப் புரிந்து கொள்ளவேண்டும். புரட்சிக் கலைஞர்களைத் தவிர ஏனைய கலைஞர்களையும் தன் பக்கம் இழுக்க புரட்சி முயற்சி எடுக்க வேண்டும். புரட்சிக் கண்ணோட்ட முள்ளவர்கள் மக்கட் தொகையில் குறைந்த எண்ணிக்கையிலே இருப்பார்கள். அவர்கள் முன்னோடிகளாக இருப்பதுமட்டுமின்றி

ஏனைய மக்களையும் தங்களுடன் நடத்திச் செல்பவர்களாக இருக்க வேண்டும். நேர்மையான எல்லா மனிதர்களுக்கும் அவர்கள் எந்தத் துறையினராயினும் சரி; புரட்சிப்பாதை அமைத்துத் தர வேண்டும். சந்தேகங்கள் உள்ள அனைவரையும் புரட்சியாளராக மாற்ற புரட்சி வழி செய்ய வேண்டும். பெருவாரியான மக்களைத் தன் பக்கம் சேர்க்கப் புரட்சி முயற்சி எடுக்க வேண்டும். புரட்சியாளர்கள் மட்டுமின்றி எல்லா நேர்மையான மனிதர்களும் புரட்சியின்பால் சார்ந்திருக்கும்படி நாம் காரியம் ஆற்ற வேண்டும்.

முற்றிலும் திருத்த முடியாத பிற்போக்காளர்களை மட்டுமே புரட்சி ஒதுக்கவேண்டும்; திருத்த முடியாத எதிர்ப்புரட்சி வாதிகளை. மற்ற அனைவரையும் பற்றி புரட்சி திட்டங்கள் வகுக்கவேண்டும் புரட்சியாளர்கள் அல்லாதகலைஞர்களும், இலக்கிய ஆசிரியர்களும் புரட்சியின் அமைப்புக்குள்ளேயே தங்கள் படைப்புகளை உருவாக்குவதற்கு நாம் வசதி செய்து கொடுக்கவேண்டும். அவர்கள் படைப்பு தத்துவத்திற்கும், சுதந்திரமாய் செயல்படவும் நாம் மேடை அமைக்க வேண்டும்.

புரட்சியின் அடிப்படைக் கொள்கைகளில் ஒன்று கலை, பண்பாடு இவற்றின் பூரணவளர்ச்சி. கலை, பண்பாட்டுச் சாதனங்கள் மக்களுக்குசொந்தமானவை என்பது. எனவே புரட்சி கலைப்பண்பாட்டுச் சாதனங்களை ஒடுக்குகிற முயற்சிஎதுவும்மேற்கொள்ளாது. பொருள் ரீதியில் மக்களுக்கு வளமான வாழ்க்கை அமைக்க முயற்சிப்பது போலவே, பண்பாட்டு ரீதியில் ஆன்மிக ரீதியில் மக்கள் வாழ்க்கையில் வளமுண்டாக்குவது நமது கடமை.

மக்கள் தங்கள் பொருள் ரீதியான தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளப்பயன்படும் சாதனங்களை, சூழ்நிலைகளை உருவாக்குவதில் நமக்கு எவ்வளவு அக்கறை உண்டோ, அவ்வளவு அக்கறை அவர்கள் பண்பாட்டு ரீதியான வளர்ச்சிக்குப் பயன்படும் சாதனங்களையும், சூழ்நிலைகளையும் உருவாக்குவதிலும் உண்டு.

நமது மக்களின் பண்பாட்டுத்தரம் குறைந்துள்ளதா? சென்ற வருடம் வரை பெரும்பாலான மக்களுக்கு எழுதப்படிக்கத் தெரியாது. அவர்கள் பசியினால் வாடியிருக்கிறார்கள்; மோசமான நிலையில் அவர்கள் வாழ்ந்திருக்கிறார்கள்; மிகுந்த அவதிக்குள்ளாகி இருக்கிறார்கள். இன்னமும் ஒரு பகுதி மக்கள் தங்கள் தேவைகளைப் பூர்த்திசெய்து கொள்ளமுடியாமல் இருக்கிறார்கள். அவர்களுடைய பொருளாதாரத் தேவைகளை முற்றிலும் பூர்த்தி செய்வதற்கான முயற்சிகளில் நாம் ஈடுபட்டு இருக்கிறோம்.

இதுபோலவே கலாசாரத்தின் பயன்களையும் சகல மக்களும் அனுபவிக்கவேண்டும். அதற்காகக் கலைஞன் தன்னுடைய சிருஷ்டிகளின் கலைத்தரத்தை தியாகம் செய்யத் தேவையில்லை. கலைஞன்மக்களுக்காக படைக்க வேண்டும்; மக்களும் தங்கள் கலாசாரத்தை உயர்த்திக் கொண்டு கலைஞன் அருகில் நெருங்க வேண்டும். இதற்கான பொதுவிதி எதுவும் கிடையாது. எல்லா கலைப்படைப்புகளும் ஒரே தன்மை கொண்டவை அல்ல.

கலைப்படைப்புகளில் சில மக்களுக்கு எளிதில் விளங்குவதாகவும், நெருங்கியதாகவும் படலாம்; இன்னும் சில அப்படிப்படாமல் போகலாம். இதற்காக நாம் விதிமுறைகள் வகுக்க முடியாது; ஆயின் சில கேள்விகள் கேட்கலாம். கலைஞன் மக்களை அணுகுவதற்கு ஏதேனும் அடிப்படைகள் அமைக்க முடியுமா? மக்கள் கலைஞர்களிடம் என்ன எதிர்பார்க்கிறார்கள்?

இந்தக் கேள்விகள் கூட விஷயத்தை மிக எளிதாக்கிவிட்டன. கலைப்படைப்புகளை எல்லா மக்களும் அணுகுவதற்குச் சுலபமானதாக்க வேண்டும்; ஆனால் அதையும் விட முக்கியம் மக்கள் அவற்றைப் புரிந்து கொள்வதற்கு, இன்னும் நன்றாகப் புரிந்து கொள்வதற்கு ஏற்ற காரியங்களை நாம் செய்யவேண்டும்.

இந்தக் கோட்பாடு எந்த கலைஞனின் மனோ தர்மத்திற்கும் முரண்பட்டதாகஇருக்காது என நம்புகிறேன்; கலைஞன் தன்னுடைய சமகாலத்தவர்களால் ரசிக்கப் படுவதைப் பெரிதும் விரும்புவான் என்றே நான் நினைக்கிறேன்.

இனி வரப்போகிற காலங்களுக்காக மட்டுமே படைக்கிறவன் எவனும் இருக்கமாட்டான். நம்முடைய தீர்ப்பு தவறுதலாகக்கூட இருக்கலாம். ஆனால் ஒன்று சொல்லுவேன். எதிர்காலத்திற்காகப் படைக்கிறேன் என்று சொல்லுகிற கலைஞன் தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்பவனாகவும் இருக்கலாம்.

தன்னுடைய சமகாலத்தவர்களால் ரசிக்கப்படுகிறவன், எதிர்காலத்திலும் ரசிக்கப்படலாம். மகா பெரிய கலைஞர்கள் எல்லாருமே சமகாலத்தவர்களுக்காகவே படைத்திருக்கிறார்கள்; அவர்களுடைய படைப்புகள் சரித்திர முக்கியத்துவம் கொண்டு, உலகம் பூராவுக்கும் பொதுவாகவும் விளங்குகின்றன. வரப்போகிற சந்ததிகளுக்காகமட்டும் நாம் புரட்சி அமைக்கவில்லை; நம்முடைய சந்ததிக்காக நாம் புரட்சி அமைக்கிறோம். நம்முடைய எதிர்கால சந்ததிகளும் இதை ஏற்றுக் கொள்ளலாம். ஒரு சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்ச்சியாகக்கூடப் போய்விடலாம்.

எதிர்காலத்திற்காக நாம் புரட்சி ஆற்றவில்லை; ஆனால் நம் புரட்சி எதிர்காலத்திற்கும் பயனுள்ளதாக இருக்கும். ஏனென்றால் அது இன்றைக்கான புரட்சி; இன்றைய ஆண், பெண்கள் பங்கு கொள்கிற புரட்சி.

நாம் எதிர்கால சந்ததிகளுக்காகப் புரட்சி செய்கிறோம் என்றால் யார் நம்மைப் பின்பற்றுவார்கள்?

நமது சகமனிதர்களுக்காக நாம்செயல்படுகிறோம்; சிருஷ்டிக்கிறோம். அதே நேரத்தில் இறவாப் புகழுடைய படைப்புகளையும் நாம் மகிழ்ச்சியுடன் வரவேற்போம்.

(ஃபெடரல் காஸ்ட்ரோவின் "Words to the intellectuals" என்ற கட்டுரையின் சில பகுதி)

---


# கசடதபற

(ஒரு வல்லின மாத ஏடு)

தனி இதழ்: 30 காசு

ஆண்டுச் சந்தா: ரூ. 3/-

முகவரி: 'கசடதபற'
எண்: 1, தேவடி தெரு,
மயிலாப்பூர், சென்னை-4.

# அமைதி, அமைதி வழக்கு தொடங்கிவிட்டது

எஸ். கோபாலி

தமிழ் நாட்டைத் தவிர ஒவ்வொரு நாட்டிலும் மக்கள் அவரவர்கள் 'தியேட்டரைப்' பேணி வளர்க்கிறார்கள். ஒரு நாட்டின் வளம், அதன் தியேட்டர் நாடியைப் பார்த்துக் கண்டு கொள்ளலாம் என்று கார்கியா லோர்கா என்ற நாடகாசிரியர் கூறியிருக்கிறார் ஆங்கிலேயன், அமெரிக்கன், பிரெஞ்சு நாட்டுக்காரன், தத்தம் தியேட்டர்களைப்பற்றி பேசும்பொழுது, நாம் மட்டும் நம் கட்டை விரலைக் கடித்துக்கொண்டு நிற்கும் நிலையிலிருக்கிறோம். ஒவ்வொரு நாட்டின் தனிச் சிறப்பும், தனித் தன்மையும் அதன் தியேட்டரில் வியாபகமாகக் காணப்படுகிறது. நமக்குத் தியேட்டர் என்றே ஒன்று இல்லாததால், தனித்தன்மை என்பதும் இல்லாமலிருக்கிறது அத்தனித் தன்மை ஒரு நாளிலோ, ஒரு வருஷத்திலோ வந்துவிடாது. கடுமையாக உழைத்தால் ஓரிரு தலைமுறைகளில் அதைப் பெறலாம்.

வடமொழி நாடகங்களையும், நாடக மேடையைப் பற்றிய குறிப்பேடுகளையும் காட்டி, "இதுதான் எங்கள் தியேட்டர்" என்று சொல்லும் அளப்பை விட்டுவிட வேண்டும் அவை அக்காலத்திற்கேற்ப அமைந்தவை. இக்காலத்திற்கும் அந்நாடகங்கள் சுவையாக இருக்கலாம். ஆனால் இன்றைய சூழ்நிலைக்கு அவை ஒத்ததாக இல்லை.

தியேட்டருக்கும், அதை வளர்க்கும் சமூகத்திற்கும் நெருங்கிய தொடர்பு இருக்கிறது. சமூகத்தின் முக்கிய அம்சம் தியேட்டர். விபசார விடுதிகள்கூட சமூகத்துடன் ஒரு தொடர்பை வைத்திருக்கின்றன. இதை ஆங்கிலத்தில் ரிலேடட்நெஸ் (Relatedness) என்று கூறுவர்.

கிரேக்க காலம் முதல் இன்றுவரை மேலைய நாடுகளில் சமூகத்திற்கும் தியேட்டருக்கும் இந்தத் தொடர்பு இருந்திருக்கிறது. இந்த ஒரு நெருங்கிய தொடர்பு அல்லது ஐக்கியம், பந்தம் இல்லாவிட்டால் தியேட்டர் வளராது. வளர முடியாது.

வடமொழி நாடகங்களைக் காண்பித்து "கிளாசிகல் தியேட்டர்" என்று ஊரை ஏய்க்கும் வழக்கத்தை விட்டு, இன்று, நமக்கு வேண்டிய தியேட்டரை ஏற்படுத்த வேண்டியவைகளைச் செய்யவேண்டும். கிரேக்க நாடுகளிலும் கிளாசிகல் தியேட்டரில் சில விசேஷ சமயங்களில் நாடகம் நடிக்கின்றார்களே யன்றி, அந்தத் தியேட்டரையே சாஸ்வதமாகக் கொண்டாடுவதில்லை. ஏனெனில் காலம் மாறிவிட்டது.

இந்தியாவை எடுத்துக்கொண்டால் மற்ற மாநிலங்களில் நாடகம் வளர்ந்திருக்கும் அளவு தமிழ்நாட்டில் வளரவில்லை. இதற்குக் காரணம் நாடகத்திற்கு மூன்றாவது ஸ்தானத்தை அளித்திருப்பதுதான். இயலுக்கும், இசைக்கும் பிறகா நாடகம்? இல்லை அவை சேர்ந்தா?

நாடகம் முன்னேறாததற்கு ஒரு காரணம் இங்கு தியேட்டர்களே இல்லை என்பது என் கருத்து. ஒரு நாடகாசிரியன் எதையும் சூன்யத்தில் சிருஷ்டி செய்ய முடியாது. அவன் தன்னுடைய மக்களைப் பற்றி ஆழமாக அறிந்த பிறகு அவர்களை வைத்து, அவர்களுக்காகத்தான், அவர்களுடைய பிரச்சினைகளைப் பற்றி எழுத முடியும். அப்படி எழுதப்படாத நாடகங்கள் தியேட்டரின் வளர்ச்சிக்கு உதவாது. நாடகத்தின் கருவும், பாத்திரங்களும், மறைமுகமானதாகவோ, அல்லது உண்மைக்கும், வாழ்க்கைக்கும் புறம்பானதாகவோ இருந்தால் அம்மாதிரி நாடகங்கள் தியேட்டரின் வளர்ச்சியை உந்துவதில்லை.

இப்பொழுது தமிழ்நாட்டில் நடக்கும் நாடகங்கள் இந்த ரகத்தையே சேர்ந்தவையாக இருக்கின்றன. நாடகங்களுக்கும், மக்களுக்கும் இடையில் பெருங்கடல் இருக்கிறது. நாடகங்களில் வரும் பாத்திரங்கள் கற்பனைக்கும் புறம்பானதாக இருப்பதால் மக்களுக்கு நாடகத்தில் அடிபடும் பிரச்சினைகள் வெறும் தமாஷாகவே இருக்கின்றன. நாடகப் பாத்திரங்களுக்கும் அழகான, மெருகுபோட்ட பெயர்களே கொடுக்கப்பட்டிருக்கின்றன. வாழ்க்கையின் அடிப்படையான பிரச்சினைகளை ஒட்டி ஒரு நாடகமும் எழுதப்படவில்லை. அப்படி எழுதப்பட்ட பிரச்சினைகளும், நாடகத்தைப் பார்க்கும் பொழுது "இது நம்முடைய பிரச்னை இல்லை, யாருடையதோ' என்று எண்ணும்படி தோன்றுகிறது. அப்படியொரு தோற்றம் ஏற்பட்டால் ஆளைப்பார்க்க ஆசைப்படும் பொழுது அவன் நிழலைப் பார்ப்பது போலாகிவிடும்.

மற்ற மாநிலங்களின் நிலை இம்மாதிரி இல்லை. குறிப்பாகச் சொல்ல வேண்டுமானால் வங்காளமும், மகாராஷ்டிரமும் நம்மை விடப் பன்மடங்கு முன்னேறியிருக்கின்றன.—சபாக்களின் பிச்சை, ஆதரவு இல்லாமல்! அங்கே எழுதப்படும் நாடகங்கள் அனைத்தும் முதல் தரம் என்று சொல்ல முடியாவிட்டாலும், ஓரிரு நாடகாசிரியர்கள் தியேட்டரை நன்கு வளர்த்து, தரத்தை உயர்த்தியிருக்கின்றனர்.

இதைச் சான்றாகக் கூற நான் வங்காள நாடகாசிரியர் பாதல் சர்க்கார் எழுதிய "ஏ பாங் இந்திரஜித்" என்ற நாடகத்தையும், மகாராஷ்டிர நாடகாசிரியர் விஜய் தெந்துல்கர் எழுதிய "அமைதி, அமைதி. வழக்கு தொடங்கிவிட்டது" (Silence! The court is in session) என்ற நாடகத்தைப் பற்றியும் கூற விரும்புகிறேன்.

முதலில் ஏ பாங் இந்திரஜித்.

பாதல் சர்க்கார் இந்த நாடகத்தைக் கண்கட்டி வித்தையால், கூடைக்குள்ளிருந்து மாஞ்செடிபோல் கொண்டு வந்துவிடவில்லை. இதற்கு முன் பல நாடகங்கள் எழுதி, இதையும் நடுவில் கொணர்ந்துள்ளார். அதற்கும் மேலாக இவர் மேலைய நாட்டில் நிகழும் நாடகங்களின் போக்கை, மாறுதல்களை, அவ்வப்போது அறிந்து, அவைகளைக் கூடிய வரை நம் நாட்டுக்குத் தக்கவாறு உபயோகப்படுத்தியிருக்கிறார்.

நாடகத்தில் இரண்டு உண்டு. ஒன்று உடல், இரண்டாவது உயிர். இதை ஆங்கிலத்தில் Form and Content என்று கூறுவர். ஏ பாங் இந்திரஜித்தில் இவை இரண்டும் ஒன்றுடன்ஒன்று நன்றாக இணைந்து இருக்கின்றன. இன்றைய இந்தியாவின் நிலையை ஒவ்வொரு பாத்திரமும் எடுத்துக் காட்டுகின்றன. இத்துடன் இல்லாமல் நாடகமாகப் பார்க்கும்பொழுது அலுப்பு சலிப்புத் தராமல் விறுவிறுப்பாகப் போகும் குணம் இருக்கிறது.

இதில் வரும் பாத்திரங்கள், அமல், விமல், கமல், இந்திரஜித், அத்தை, மானசி, இவர்களெல்லோரும் எழுத்தாளனின் கற்பனையினின்றும் வந்தவர்கள். எந்த ஊரிலும் அமல் விமல் கமலைக் காணலாம். இந்திரஜித்தும் மானசியும் அத்தையும் எந்தக் குடும்பத்திலும் காணலாம். அவர்களைக் காணும் பொழுது அவர்களில் நாமும் ஒருவர், நம்மில் அவர்களும் ஒருவர் என்ற நினைப்பும் வருகிறது. இதுவே நாடகத்தின் வெற்றி நிலையற்றவாழ்வு, நம்மைக்கண்டே நமக்குள் ஏற் பயம், பீதியற்றவாழ்கை, நம்பிக்கையில்லாவாழ்க்கை நமக்குப் பிடித்தாலும் பிடிக்காவிட்டாலும் நம் வாழ்க்கையில் நடக்கும் தடுக்க முடியாத சம்பவங்கள், நம் ஆசைகள், வெற்றிகள், தோல்விகள் இவைகளையெல்லாம் பிரதிபலிக்கின்றது இந்நாடகம்.

இந் நாடகத்தின் உடல் அடுக்கடுக்கான அறைகள் போன்று இல்லாமல் பாம்பு போன்று நெளிந்து நெளிந்து செல்கின்றது. வாழ்க்கை பயனற்றது; இருந்தாலும் நாம் வாழத்தான் வேண்டும் என்ற சித்தாந்தத்தை தெளிவுறுத்துகின்றது இந்நாடகம். இதற்காக, நாடகாசிரியர் நம்மை அழச்சொல்லவில்லை. ஹாஸ்யம் என்று தனியாக ஒன்றைத் திணிக்காமல் பாத்திரத்துடனே அதை இணைத்திருக்கிறார். இது பயங்கர ஹாஸ்யமாகவும் இருக்கலாம். இதில் அவர் பெக்கெட், இயனஸ்கோ, பின்டர் போன்ற நாடகாசிரியர்களைப் பின்பற்றி இருப்பது நன்கு தெரிகிறது.

அடுத்தது: "அமைதி. அமைதி. வழக்குதொடங்கிவிட்டது."

இந் நாடகத்தின் சிறப்புஅம்சம் இதில் வழக்கமாக வரும் நாயகனோ, நாயகியோ, கிடையாது. விஜய் தெந்துல்கர் அயல் நாட்டு நாடகாசிரியர்களை அதிகம் தெரிந்தவரில்லை. இருப்பினும், தம் மக்களை நன்கு தெரிந்தவர். சமூகத்திற்கு, ஒருவரைப் பிடிக்காவிட்டால், அவரை எப்படி அழிக்க முடியும் என்பது இந் நாடகத்தின் கரு. ஒரு விதத்தில் பார்த்தால் நாடக மேடைதான், இல்லை, தியேட்டர்தான் இந் நாடகத்தின் நாயகன், நாயகி எல்லாம்.

ஒரு சாதாரண பழைய ஹாலில் நாடக ஒத்திகைக்காக சிலர் வருகின்றனர். கேலிக்காக ஒரு வழக்கை நடத்துகின்றனர். ஆராய்கின்றனர். வழக்கு என்னவென்றால் லீலாபெனரே என்ற பெண், மணமாகாமல் கருத்தரித்து, அக்கருவைச் சிதைக்கிருள். இதை ஒரு பெரிய குற்றமென வாதாடித் தண்டனை அளிக்கின்றனர். இந்தக் குற்றத்திற்குக் காரணம் அந்த வழக்கை வாதாடியவர்களே. ஆனால் இதைப்பகிரங்கமாக ஒப்புக் கொள்ள அவர்களிடம் உரம் இல்லை. நாடகம் இத்துடன் முடியவில்லை. லீலாபெனரே வாழவேண்டும் என்று தீர்ப்பு அளிக்கின்றனர். ஆனால் நாடகம் முடியும் பொழுது லீலாபெனரே உண்மையிலேயே இறந்து விடுகிருள்.

லீலாவின் வாழ்க்கையையே கிண்டலாக எடுத்து, அவளைத் தற்கொலை செய்து கொள்ளும் அளவிற்கு கொண்டு விடுகிறது சமூகம். ஒரு கோணத்திலிருந்து பார்த்தால் வாழ்க்கையே கேலியாகவும், சமூகமே கேலி நீதிமன்றமாகவும் தோன்றுகிறது. உண்மைக்கும், பொய்க்கும் வரம்பு அதிகமில்லை. இக்கரைக்கு அக்கரைப் பச்சை என்பதை நன்குணர்த்துகிறது. இதில் ஒரளவு பிராண்டெல்லோவின் பாணியின் சாயலைக் காணமுடிகிறது. இந்நாடகத்தில் அங்கு மிங்கும் சற்று ஹாஸ்யத்தைக் காண முடிகிறதேயன்றி மற்ற இடங்களில் மிக்க கெடுபிடியுடன்தான் செல்கிறது.

கேட்கலாம், இதை சாதாரண கோர்ட்ரூம் டிராமாவாகவைத்திருந்தால்என்ன? என்று. அப்படிவைத்திருந்தால் தியேட்டரையே ஒரு கேரக்டராக வைத்து, illusion reality இவை இரண்டையும் வைத்து, விளையாடும் irony போய்விடும். நாடகத்தில் நடப்பதை நிஜமென நம்பிவிடுவோம். இதில் வரும் ஒவ்வொரு பாத்திரமும் மகாராஷ்டிரத்தில் பார்க்கக் கூடியவர்கள். பாத்திரத்தின் பெயர்கள் கூட இங்கிருப்பது போல் ரோமான்டிக்காக இல்லாமல் அன்றாட வாழ்வில் காணப்படும் பெயர்களாகவே இருக்கின்றன. பாத்திரத்தின் தன்மை எங்கும், மனிதர்கள் இருக்குமிடம் எங்கும் காணப்படும். நாடகத்தின் கடைசியில், அழுவதா, சிரிப்பதா என்ற பிரமிப்பு நம்மைக்கவ்வும்.

இந்த இரண்டு நாடகங்களின் விசேஷம் என்னவென்றால் இவை இரண்டிற்கும் பிரத்யேகமாக 'செட்' என்று ஒன்று தேவையில்லை. நாடகத்தினுள் இருக்கும் வேகமேபார்ப்பவரையும், படிப்பவரைதம் ஈர்க்கும். இம் மாதிரி நாடகங்கள்தான் சமூகத்துடன் தொடர்பு கொண்டவைகளாக இருக்கின்றன. இருக்கமுடியும்.

மணிமேகலையையும் சிலப்பதிகாரத்தையும் காட்டிப் பயமுறுத்தாமல், சங்கரதாஸ் சுவாமிகளையும், சம்பந்தமுதலியாரையும் காட்டி "ஆ, ஆ. இதுவே நாடகம்" என்று நடிக்காமல், உண்மையில் நாடகங்களை எழுதத் தமிழ் நாடகாசிரியர்கள் முன் வருவார்களா? வந்தால் தமிழனுக்கும் ஒரு தியேட்டர் உண்டு.

---

## நீ வருவாய்

ரொம்ப நாளாய்
உனக்காகக்
காத்திருந்தேன்—
மயான பூமியில்.
நீ வரக்காணோம்.
சரி என்று சட்டையை
மாட்டிக் கொண்டு
ஜரிகை அங்க வஸ்த்ரம் தொங்க
மியூஸிக் அகடமிக்குப்
புறப்பட்டேன்.
அங்கே இப்போது ஸீஸன்
இல்லையாம்.
ஸீஸனில் பாடியவர்கள்
சிகிச்சைக்குப் போய் விட்டார்கள்.
சரிதான் என்று யூனிவர்ஸிடிக்குப்
போனேன். அங்கே கோடைலீவாம்.
வைஸ் சான்ஸலர் வைப்பைக்
கூட்டிக்கொண்டு கனடா
போய்விட்டாராம் கான்பரன்ஸ்
ஒன்றிற்காக.
கான்பரன்ஸ் தலைப்பு
'இன்றைய கல்வி
மகத்தான அழிவு சக்தி.'
வெயிலாக இருந்ததினால்
வேறெங்கும் போகவில்லை.
உன்னைப்பார்க்க முடியவில்லை.
அதனாலென்ன. இன்றில்லாவிட்டால்
நாளை வரப்போகிருய் நீயாகவே
துணையில்லாமல்.

ஐராவதம்

---

# நாக்கு உரித்த கிளிகள்

ந. முத்துசாமி

கோபம் படைப்புச் சக்தியை வீணாய் எரிக்கிறது. ஆனால், இதற்காக இதைச் செய்கிறோம், இதன் விளைவு இது என்னும் திட நம்பிக்கையோடு கொள்ளும் கோபம் சக்திச்சேதமின்றி சேமிப்புச் சக்தியாக மாறும் வகையில், சுயபிரக்ஞையுடன் இக்காரியத்தில் மிக, மிகமிக அமைதியாக ஈடுபட இருக்கிறோம். எனவே, கசடதபறவில் தொடர்ந்து கோபம் ஒரு யோகமாகப்போகிறது. ஆகையால், கசடதபறவின் முதல் யோகியாக என் படிப்பறையில் உட்கார்ந்து நான்சிலரிடம் அமைதியாகக் கோபம் கொள்ளவேண்டும்.

சில மாதங்களுக்குமுன் 'இலக்கியச் சிந்தனை' என்ற இலக்கிய அமைப்பின் கீழ் கூட்டம் ஒன்று நடந்தது. எஸ். வைதீஸ்வரன் தன் கவிதைகளைப் படித்தார். பெரும் பொழுதும் பெண்கள் பக்கமே பார்த்துக்கொண்டு, ஆண்மை கொள்ளும் நிறைவு தெரியப்படித்து முடித்தார். படித்து முடித்ததும் 'இப்பொழுது கலந்துரையாடல்' எனக் கூட்ட அமைப்பாளர் லக்ஷ்மணன் அறிவித்தார். மா-ா-ா-ஸ்ரீ. அவ்வை. து. நடராஜன் அவர்களும், நா. பார்த்தசாரதி அவர்களும், க. நா. சுப்ரமணியமும் அதில் கலந்து கொண்டார்கள். ஸ்ரீ நடராஜன் எழுந்துசொற்பொழிந்து' பழக்கவாசனையால் கலந்துரையாடலைப் பட்டிமன்றமாகச் சட்டி நிறைய ஆக்கிவைத்தார். பட்டிமன்றம் நம் பழையமரபு, சங்ககாலமரபு, இடைக்காலமரபு, இன்றையமரபு, நாளைக்கும் அதுவே மரபு, தமிழனின் மரபு அது, தங்கத் தமிழனின் மரபுஅது, சிங்கத் தமிழனின் மரபு அது. என்றைக்கும் புதுமை மாறாத பழைய மரபு அது (சஞ்சமே, மயஸ்சமே, பிரயஞ்சமேன்னு காமச்சமே, காமச்சமே, சௌனஸ்சமே, பத்ரஞ்சமே, யரேயஸ்சமே, வஸ்யஸ்சமே, யசஸ்சமே,த்ருபனஞ்சமே...சுகுணஞ்சமே ஓம் சாந்தி சாந்திசாந்திஹி)ஆகவே மரபைஒட்டி ஸ்ரீ நடராஜன் அதைப் பட்டிமன்றப் பிள்ளையாராகப் பிடித்து வைத்தார். அவ்வை. து. நடராஜனுக்கு வெண்கலத் தொண்டை. சொற்கள் எல்லாம் யானைகள். வெண்கலக் கடையில் யானை புகுந்த குஷியில் ஒரு விளையாட்டுச் சிறுவனை ஒக்க, கலிப்பா, ஆசிரியப்பா, வெண்பா, வஞ்சிப்பா என்பது போலப் புதுக் கவிதைக்கு செல்லப்பா என்று நாமகரணம் செய்வித்தார். சிறுவனின் கண்டுபிடிப்புச் சந்தோஷம் அவரிடம் நிரம்பக் காணப்பட்டது. ஆர்கிமிடீஸைப்போல 'யுரீகா' என்று குதித்தோடாத குறை. ஆர்கிமிடீஸுக்கு அந்த க்ஷணத்தில் தோன்றிற்று. அதனால் குதித்துத் தெருவோடு ஓடினார். ஸ்ரீ நடராஜன் ஏற்கனவே கண்டுபிடித்து வைத்திருந்தார் செல்லப்பாவை. சந்தர்ப்பத்திற்காகக் காத்துக்கொண்டிருந்தார் போலிருக்கிறது. கிடைத்த முதல் சந்தர்ப்பத்தை இங்கு பயன்படுத்திக் கொண்டார். சந்தர்ப்பம் கிடைத்த பூரிப்பில் சிரிப்பு வெடித்துக்கொண்டு வந்தது அவருக்கே. அடக்கி தொண்டையில் தக்கை போட்டு வைத்து விட்டுப்பேசினார். தான் சிரிக்கக் கூடாது; கூட்டம் தான் சிரிக்க வேண்டும். கூட்டத்துக்கும் ரொம்ப சந்தோஷம். கூட்டம் சிரித்தது. கைகொட்டிச்சிரித்தது. மிருகங்கள் கூடினால் மந்தை. மனிதர்கள் கூடினால் கூட்டம். மந்தை அஃறிணை பலவின்பால். கூட்டம் உயர்திணை பலர்பால். கூட்டத்தில் ஆண்களும் இருந்தார்கள். பெண்களும் இருந்தார்கள். எனவே பால் கலப்பு. எனக்கு வெட்கமாக இருந்தது. வெட்கம் மனதின் காரியம். கூட்டம்முடிந்து நண்பர்கள் பலபேரிடம்கேட்டேன். அந்த நேரம் தங்களுக்கும் வெட்கமாகத்தான் இருந்தது என்றார்கள். மனம் இருப்பவர்களுக்கு அது வெட்கமாகத்தான் இருக்கும்போலிருக்கிறது. அன்று கூட்டத்தில் எல்லோரும் அதனால் ஆரோக்கியம் அடைந்தார்கள். சிரிப்பது உடம்புக்கு ஆரோக்கியம். அக்குளில் கிச்சுக்கிச்சு மூட்டிச் சிரித்தால் கூட ஆரோக்கியம்தான். கவுட்டியில் மூட்டிச் சிரித்தால்கூட ஆரோக்கியம்தான். தமிழுக்கு மருத்துவம் பார்க்கப் பிறந்தவர் ஸ்ரீ நடராஜன். எங்கு கிச்சுக்கிச்சுமூட்டுவது என்பது அவருக்கு நன்றாகத் தெரியும்.

மேலும் ஸ்ரீநடராஜன காலங்களைக் கடந்து வாழ்பவர். நேற்று, இன்று, நாளை என்பதெல்லாம் அவருக்கு இல்லை. அவர் உடம்பு இருபதாம்நூற்றாண்டின் விஞ்ஞான வளர்ச்சியின் பயன்களை எல்லாம் முழுக்க முழுக்க தேனில் விழுந்த ஈயாக அனுபவித்துக் கொண்டிருக்கிறது. மனம் பல நூற்றாண்டுகளுக்கு முன் வாழ்ந்துகொண்டிருக்கிறது. சங்ககாலம், அதற்கு முந்தி இடைச்சங்ககாலம், அதற்கும்முந்தி முதற்சங்ககாலம் இப்படி முந்திமுந்திப் போய் ஆரியப்படை எடுப்புக்கும் முந்தி ஒருவளமான, வலுவான கலப்பற்ற தமிழ்நாகரிகக்காலத்தில் உடம்பு மேலே டெரிகாட்டன் சட்டை போட்டுக் கொண்டிருந்தாலும் மனம் வாழ்ந்து கொண்டிருக்கிறது. (ஹே.. ஹே... திரும்புங்க... திரும்புங்க ... மோஹஞ்சொதாரோ ஹாரப்பாவிலே புல்மொளச்சிருக்குமேயப் போகலாம்.... திரும்புங்க... திரும்புங்க.) எனவே அவருக்கு உடம்பின் வயதுக்கும் மனதின் வயதுக்கும் ஏகப்பட்ட வித்தியாசம். இவர் வைதீஸ்வரனின் கவிதை 'உரிப்பை' மிக அபாரமாகக் கிண்டல் செய்தார். உரிப்பு, நகரச் சுவர்களை நகராத பாம்புகள் என்கிறது. அவைஅடிக்கடி வால்போஸ்டர் தோல் வளர்ந்து தடித்துவிட; நள்ளிரவில் அவசரமாய்ச் சட்டை உரித்துப் புதுத்தோலில் விடிந்து பளபளக்கும் பட்டணத்துப் பாம்புகள் என்கிறது. அப் பாம்புகள் இந்த நகராத சுவர்கள் என்கிறது. சுவரை அவர் பாம்புக்கு ஒப்பிடுவது ஸ்ரீநடராஜனுக்கு அருவருப்பைத் தருகிறதாம். பாம்பு பயத்தைத் தரும். அருவருப்பைத்தரும் பாம்புகளும் இருக்கின்றன. உரிப்பின் அர்த்தம் ஸ்ரீநடராஜனின் பெரிய அறிவைஎட்டும்அளவுக்குக் கடுமையானதாக இல்லை போலிருக்கிறது. சுலபமாகத் தெரியக்கூடிய அர்த்தமாக இருப்பதனால் அவர் கவனத்திலிருந்து அதுநழுவிவிட்டிருக்கிறது. பாம்பு அருவருப்பைத் தருவதைப் போல சுவரும் அருவருப்பை நடராஜனுக்குத் தர வேண்டும் என்பதற்காகத்தான் வைதீஸ்வரன் அந்தக் கவிதையை எழுதி இருக்கிறார். நமக்கு இந்தச் சுவர்கள் அருவருப்பைத்தான் தருகின்றன. புதுப்புது வால்போஸ்டர் ஒட்டப்பட்டு சுவர்கள் அருவருப்பைத்தருகின்றன. இப்படித்தான் சுவர் அவருக்கும் அருவருப்பைத் தருகிறதுபோலும் என்றால் அதுதான் இல்லை என்கிறார். அழகாக இருக்கிறது என்கிறார். அடிக்கடி ஜாக்கெட் மாற்றிக்கொண்டு வரும்

பெண்கள் இச்சுவர்கள் என்று மரபுப்படிசொன்னால் எவ்வளவு அழகாக இருந்திருக்கும் என சப்புக் கொட்டிச் சொல்கிறார். மரபு நடராஜன் பெண்களின் ஜாக்கெட்டுகளையே பார்த்துக் கொண்டு போகிற பேர்வழி போலிருக்கிறது. ஒரு தற்காலப் பார்வைப் பேர்வழி நடராஜனை எப்படிப் பார்ப்பான்? நடராஜனுக்குவால்போஸ்டர் ஒட்டப்பட்டசுவர்கள் அலங்காரமாகத் தோன்றுகிறது. விகாரமான வால் போஸ்டர்களில் சுவர்கள் அசிங்கப்படுவது அருவருப்பைத் தருவதுதான். வளர்ந்தமனிதன்எதிர்வினையாக இருக்கவேண்டும். அச்சுவர்கள் பெண்களாக நடராஜனுக்குத் தோன்றினால் தற்காலப் பார்வையுள்ளவன் நடராஜன் பெண்களை எவ்வளவு அசிங்கமாகப்பார்க்கிறார் என்றுதான் புரிந்து கொள்வான். நம் பெண்கள் இந்த வால்போஸ்டர்களைப் போலவா ஜாக்கெட் போட்டுக்கொண்டு போகிறார்கள். நம் பெண்கள் என்ன சென்னைச் சுவர்களா? பெண்ணைப் பெண்ணாகப் பார்ப்பது தமிழ்மரபுஅல்லவா? தற்காலப் பெண் இவ்விதம்தான் தோன்றுகிறாள் என்பது நடராஜனின் விமர்சனமாக இருக்குமானால் அந்தப் பார்வைக்கு மதிப்பளிக்க வேண்டியிருக்கும். ஒரு மரபுவாதி நாகரிகப் பெண்ணைப் பார்க்கும் பார்வை இது. ஒரு பழைய ஆள் இக்காலப் பெண்ணை இப்படித்தான் பார்ப்பான். ஆனால், இவர் அப்படிச் சொல்லவில்லையே. வால் போஸ்டர்ஜாக்கெட்டுகளில் பெண்கள் மிக அழகாக இருப்பார்கள் என்கிறார். இவர் பார்க்கும் ஜாக்கெட்டுக்கு அவ்வளவு மொடமொடப்பு தேவைப்படுகிறது.

கடைசியில் திரு. நா. பார்த்தசாரதி, பட்டிமன்றச் சிங்கங்களில் ஒன்றானபார்த்தசாரதி, சங்கமரபுக் காவலனாய் நா. பார்த்தசாரதி பேச ஆரம்பித்தார். நிதானமாகக் குரலை ஏற்றி இறக்கிப் பேசினார். ஒரு பக்கம் திரும்பிய முகமும் மறு பக்கம் திரும்பிய விழிகளுமாக அவர் பேசுவார். அப்படித்தான் அன்றும் பேசினார். புதுக்கவிதைக்காரர்கள் நீண்ட நாட்களாக நா. பார்த்தசாரதியின் அனுதாபத்திற்காகக் காத்துக் கொண்டிருந்தார்கள். அந்த அனுதாபத்தை அன்று காட்டிவிட்டார். ஆனால், கையோடு ஒரு சவாலும் விட்டார் என்பது பெரிய விஷயம். எந்தப் புதுக்கவிஞனும் அந்தச் சவாலை ஏற்று எதிர்ச்சவால் விட்டிருக்கிறானெனத் தெரியவில்லை. அப்படி யாரும் எதிர்ச்சவால் விடுவதில்லை என்பதால்தான் போலும் பார்த்தசாரதி அன்று சவால் விட்டிருக்கிறார். யாரும் சங்க இலக்கியத்தின் பேச்சுக்குப் போனால் நான் சும்மா விட மாட்டேன் என்று சவால். சங்க இலக்கியம் பார்த்தசாரதியின் பிதுரார்ஜிதம் என்பது புதுக்கவிஞர்களுக்குத் தெரிந்திருக்கும் போது ஏன் வீண் வம்புக்கு போகப் போகிறார்கள் புதுக்கவிஞர்கள். நிலப்பூறி கிளர்ச்சிக் காரர்கள் அல்லர்.

பிறகு, ஆகஸ்டுமாத தீபத்தில் ஒரு கேள்வி: சேலத்திலிருந்து வெளிவரும் ஒரு காலாண்டு இலக்கிய மாத இதழின் அட்டைப்படங்கள் எதுவும் புரிவதில்லையே?

பதில்: உம்பாடுதேவலை. அந்த மாத இதழின் அட்டைதான் உமக்குப் புரியவில்லை. இன்னொரு நண்பரோ அந்த இதழின் உள்ளே வருகிறவற்றையும் புரியவில்லை என்கிறார்.

எனக்குக் கேட்கத் தோன்றுகிறது.'' அது இருக்கட்டுங்காணும் ஓய் உமக்குப் புரிந்ததாங்காணும் ஓய்.'' நிற்க,

முதலில் கேள்விகேட்டவருக்கும் பதில் சொன்னவருக்கும்காலாண்டு இதழுக்கும் மாத இதழுக்கும் வித்யாசம் என்ன என்று தெரிவித்து விட வேண்டும். இருவரும் குழப்பிக் கொண்டிருக்கிறார்கள். கேட்பவர் 'ஒரு காலாண்டு இலக்கிய மாத இதழ்' என்கிறார். பதிலாளி 'அந்த மாத இதழின்' என்கிறார். காலாண்டு இதழ் என்பது கால்+ஆண்டு+இதழ். கால் ஆண்டுக்கு ஒரு முறை வருவது. அதாவது, ஒரு ஆண்டுக்கு 12 மாதங்கள். 12 மாதங்களில் கால்பகுதி, அதாவது நான்கில் ஒரு பகுதி மூன்று மாதங்கள். ஆகவே, காலாண்டு இதழ் என்பது மூன்று மாதங்களுக்கு ஒரு முறைவரும் இதழ். மாத இதழ் என்பது. ஒரு மாதத்திற்கு ஒரு முறை வருவது. ஒரு ஆண்டுக்கு 12 மாதங்கள் ஆதலால் ஆண்டுக்குப் பன்னிரண்டு முறை வரும். காலாண்டு ஏடு ஆண்டுக்கு நான்கு முறை. மாத இதழ் பன்னிரண்டு முறை. மாத இதழ் ஆங்கிலமாதப்படி வருவதானால், 30 நாட்கள் மாதமானால் 30 நாட்களுக்கு ஒரு முறையும், 31 நாட்கள் மாதமானால் 31 நாட்களுக்கு ஒரு முறையும், 28 நாட்கள்மாதத்தில் 28 நாட்களுக்கு ஒரு முறையும் 29 நாட்கள் மாதத்தில் 29 நாட்களுக்கு ஒரு முறையும் வரும். 28-ம் 29-ம் நாட்கள்உள்ள மாதம்பிப்ரவரி. 29 நாட்கள் உள்ள பிப்ரவரி நான்கு வருஷத்திற்கு ஒரு முறை வரும். கிருஸ்துசகாப்த வருஷத்தை நான்கால் வகுத்து வகுபட்டால் லீப் வருஷம், வகுபடாவிட்டால் சாதாரண வருஷம். லீப் வருஷத்திற்கு 366 நாட்கள். வருஷத்திற்கு $365\frac{1}{4}$ நாட்கள் ஆதலால் ...இப்படி இன்னும் பலவிஷயங்கள் இருக்கின்றன. அவை ஒன்றும் இவர்களுக்குப் புரியாது. இதுதான் காலாண்டு, மாத இதழ்களுக்குள்ள வித்யாசம். இவர் எப்படி தீபத்தை மாதந்தோறும் கொண்டு வருகிறார் என்பது புதிராக இருக்கிறது. தற்குறிப்பெண், குடும்பக் கட்டுப்பாட்டிற்கு, கருத்தறியா நாட்களைக் கணக்கிட மாலையின் மணிகளைக் கணக்கிடுவதுபோல ஏதாவது கணக்கு வைத்துக் கொண்டிருக்கிறாரா?

கேள்வி கேட்டவர்தான் குழப்பிக் கொண்டிருக்கிறார் என்றால் பதிலாளி திருத்தி இருக்கவேண்டும். எந்த இதழைச் சொல்கிறீர் என்று கேட்டிருக்க வேண்டும். உடனே விழுந்து அடித்துக்கொண்டு 'அம்புட்டுக்கிட்டாரா தும்பட்டிக்காபட்டர்' என்று பதில் சொல்லி இருக்கிறார். இருவருக்கும் இத்தனை குழப்பத்திற்கும் இடையில் அந்த இதழ் எது என்று தெரிந்திருக்கிறது போலிருக்கிறது. இருவரும் அதன் பெயரைத் தெரிவிக்கவில்லை. பெயர் சொல்லிவிட்டு நாக்கைக் கோமியத்தால் கழுவி இருக்கலாம். கேட்டவரும் சொன்னவரும்ஒருவர் தானோ? கேள்விகேட்ட புத்திசாலிக் கொக்கு பிரான்மலை ச. பறம்பைதாசன். பதிலாளி நா. பார்த்தசாரதியாக இருக்க வேண்டும். அல்லது வேறு யாரையேனும் தீபத்தில் பதில் சொல்ல அமர்த்தி இருக்கிறாரோ என்னவோ? பார்த்தசாரதி ஒரு காரியம் செய்ய வேண்டும். காலாண்டுக்கும் மாதத்திற்கும் வித்யாசம் தெரியாத அந்த அசடை வீட்டுக்கு அனுப்பிவிட வேண்டும். எழுதத் தெரியாதவருக்குபத்திரிகையில் என்ன வேலை? எங்காவது வரப்பில் புல் பிடுங்கப் போகட்டும் அந்த மேதை.

---

'கசடதபற'வுக்குக்
கதை, கட்டுரை,
கவிதை அனுப்புகிறவர்கள்
கீழ்க்கண்ட முகவரிக்கு
அனுப்பவும்.

ஆசிரியர்: 'கசடதபற'
1, தேவடி தெரு,
மயிலாப்பூர், சென்னை-4.

# வேஷங்கள்

(ஆசிரியர்: இந்திரா பார்த்தசாரதி. பிரசுரம். தமிழ்ப்புத்தகாலயம், பைகிராப்ட்ஸ்ரோடு, சென்னை-5 228 பக்கங்கள். விலை நாலேகால் ரூபாய்.)

வேஷங்கள் என்கிற கதைத் தொகுதியில் நான்கு குறுநாவல்கள் அடங்கியுள்ளன. நான்கும் பத்திரிகைகளில் வெளிவந்தவை; சராசரிப் பத்திரிகைக் கதைகளிலிருந்து மாறுபட்டவை.

மனோதத்துவ நோக்கு, லேசான தத்துவ விசாரணை, புத்திசாலித்தனமான சம்பாஷணைகள் அடங்கியவை.

கம்ப்யூட்டரின் பிரகாசத்தோடு பேசுகிற மனிதர்கள் நிஜ வாழ்க்கையில் இருக்கிறார்களா என்ற சந்தேகம் வாசகனுக்கு எழக்கூடும். வாழ்க்கையில் நிறைவேறாத தாபங்களை நிறைவேற்றிக் கொள்கிற வடிகாலாகவும் இலக்கியம் பயன்படுகிறது அல்லவா? அந்த வகையில் இப்படிப்பட்ட சம்பாஷணைகளுக்கு இலக்கியத்தில் இடம் உண்டு.

சமூக நியதிகளுக்கும், தனிமனித வேட்கைகளுக்குமான போராட்டம்தான் கதைகளின் முக்கிய இழையாகப்படுகிறது. ஊனம் என்கிற கதையில் இந்த அம்சம் விசேஷமாக வேகமும், கலைத்திண்மையும் தோன்றச் செய்யப்பட்டிருக்கிறது.

வேஷங்களில் வரும் ரமணியின் மனைவி—கோபுவின் தாய் (அவள் பெயரிடப்படவில்லை) கடைசியில் எடுக்கிற முடிவும், ஊனத்தில் வரும் உமா எடுக்கிற முடியும் ஒன்றே.

ரமணியின் மனைவி நொண்டிப் பிள்ளைக்காக, உமா ஊனமுற்ற தம்பிக்காக இருக்கிற இடமே மேல் என்று தீர்மானிக்கிறார்கள்.

வேஷங்கள் பொறுத்தமட்டில் கதைதானாக விரிந்து முடிவு தவிர்க்க முடியாததாக உருவாவதில்லை.

வெகு திறமையாகக் கதை சொல்லிவரும் ஆசிரியர் நடுநடுவில் தன் குரலாகவும், கவிச் சொற்களாகவும் வருணிக்கிற இடங்கள் சுருதி பேதம் காட்டுகின்றன.

மனோதத்துவ விளக்கங்களும் சற்று அதிகமாகவே அமைந்து ஆசிரியர் தமிழ் வாசகர்களைப் பற்றிக்கொண்டுள்ள அபிப்பிராயத்தை நமக்குத் தெளிவுபடுத்துகிறது.

மற்ற இரண்டு கதைகளும் (கானல்நீர், மனக்குகை) படிப்பதற்கு சுவாரஸ்யமாக, ஆசிரியர் தடுமாறுமல் (பதிப்புரை பார்க்க) எழுதியுள்ள குறுநாவல்கள்.

—ஆரெஸ்.

---



---


Published by N. Mahaganapathy 47, Nalla thambi Mudali Street, Madras-5. Printed by M. K. Swamy at Prem Press, 8, M. K. Amman Koil St., Madras-4. Edited by N. Krishnamoorthy No. 1, Devadi Street, Madras-4